உ

திருச்சிற்றம்பலம்

# திருநெறிய தமிழ் மாலைகள்

(திருமுறைப் பாராயணத் தொகுப்பு)



திருமுறைக் கோயில்

A.NO. 19068
35/2

உ

திருச்சிற்றம்பலம்

கறைக்கண்டன் கழலடியே காப்பு

பன்னிரு திருமுறை மன்றம்

## திருமுறை ஓதும் பலன்

1) அருள் பெறலாம்; அவலம் அடையா.

2) அல்லல் அகலும்; ஆசை அறும்.

3) இடர் கெடும்; இன்பம் பெறலாம்.

4) செல்வம் மல்கும்; சிவனடி சேர்வர்.

5) ஞானமுண்டாம்; ஞாலம் ஆள்வர்.

6) தளர்வு ஒழியும்; தடுமாற்றறுப்பர்.

7) துன்பம் தொலையும்; துயர் நீங்கும்.

8) பழிபோம்; பாசம் அறும்,

9) பிறப்பு அறும்; பிணி தீரும்.

10) புகழ் சேரும்; வினை வீடும்.

11) முன்வினை மூடா; மேல்வினை வாரா.

12) நீடுவாழ்வர்; வீடு எளிதாம்.

திருச்சிற்றம்பலம்



மன்ற வெளியீடு - எண் 26.


KOVILOOR ANDAVAR
A. No. 19068
LIBRARY, KOVILOOR
35-2

உ

திருச்சிற்றம்பலம்

# திருநெறிய தமிழ் மாலைகள்

(திருமுறைப் பாராயணத் தொகுப்பு)

---

மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் தெற்கு ஆடி வீதி
பன்னிரு திருமுறை மன்றத்தின்
**வெள்ளி விழா வெளியீடு**

---

தொகுத்தவர் :

திரு. N. S. சீனிவாச பிள்ளை,
மன்றச் செயலாளர்.

---

இந்நூல் வெளிவர விரும்பி உதவியவர் :

பாகனேரி

சிவதர்ம சீலர், திருமுறைப் புரவலர், சைவத் திருவாளர்.

**இராம. முத்துப்பழநியப்பச் செட்டியார்** அவர்கள்,

மன்றப் புரவலர்.

காளயுக்தி — கார்த்திகை — 14

( 30 - 11 - 1978 )

௳

திருச்சிற்றம்பலம்

நால்வர் சிறப்பு

சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும் — முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூ லெங்கே
யெந்தைபிரா னைந்தெழுத்தெங் கே.

திருச்சிற்றம்பலம்

---


திருஞானசம்பந்தர்.
திருநாவுக்கரசர்.
சுந்தரமூர்த்தி.
மாணிக்கவாசகர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்களின்

## முன்னுரை

மாதவம் செய்த தென்திசையை வாழவைப்பன திருமுறைகள். பசியும் பிணியும் நலியாது வசியும் வளனும் பெருகி நாடு என்றும் மகிழ நல்லருளைச் சுரக்கச் செய்வன திருமுறைகள். எங்கும் நிறைந்துள்ள பரம் பொருளாகிய பசுவின் திருவருட்பாலை நமக்காக அவ்வப் போது சுரக்கச் செய்வன திருமுறைகள்.

அவ்வப்போது நாட்டிற்கும் நமக்கும் தோன்றுகின்ற பஞ்சம் போகவேண்டுமா? "வையகமுற்றும் மாமழை மறந்து" பதிகத்தைப் பாராயணஞ் செய்யுங்கள். மேக ராகக் குறிஞ்சிப் பண்ணமைந்த பதிகங்களைப்படியுங்கள்! போதும்; மனமுருகிப் படித்தாறபோதும்; தன்முனைப்பற்று இனிய ஓசையில் படித்தாற் போதும்; மழை கொட்டும் பஞ்சம் பறக்கும்.

"வாசி தீரவே காசு நல்குவீர்" எனக்கேட்டால் வறுமை தொலையும். 'இடரினும் தளரினும்' பதிகத்தை ஓதுங்கள்; பணமுடை இருக்குமா? பாருங்கள்.

சூலை, குன்மம் முதலிய நோய்கள் மிகப் பொல்லா தன. 'திடீர்' என்று வரும். வந்தால் யமவாதனைதான். சித்த வைத்தியம் இத்தகைய நோய்களை கன்ம வியாதி என்று சொல்லித் தற்கால சாந்தியாகவே மருந்துகளைக் கூறும். அத்தகைய பிணிகளையும் அறவே நம் மனவுறுதி யின் அளவிலே அகற்றுவது 'கூற்றாயினவாறு' என்ற பதிகம்

வாழ்க்கைப் பயணத்தில் வெற்றிக்குரிய ஒரே துணை மனத் துணிவு. இதனால் 'துணிவே துணை' என்று மட்டும் இருந்துவிடாதீர்கள். பிடிப்பதைப் புளியங் கொம்பாகப் பிடித்துக்கொண்டால் காற்றுக்கு அஞ்சவேண்டியதில்லை அல்லவா? அதுபோலத் தனக்கு ஈறும் முதலும் இல்லாத ஒருவனை இறுகப் பிடியுங்கள். அல்லல் என் செயும்? அரு வினை என் செயும், தொல்லைவல்வினை தொந்தந்தான் என் செய்யும் என்றிருக்கலாம்.

சிபாரிசுக் கடிதம் வேண்டுமா? செந்தமிழ்ச் சொக்க லிங்கப் பெருமானிடம் கேளுங்கள். பக்குவமான கடிதம் கொடுப்பார். காரியம் பலிக்கும். நமக்கு என்று தனியே

கிடைக்காவிட்டாலும் பாணபத்திரனுக்குக் கொடுத்த கடிதத்தை மனம் உருகப் படியுங்கள். காரியம் கைமேலே! இவ்வளவும் திருநெறிய தமிழ் மாலை ஒன்றிலே இருக்கிறது.

அமைப்பு :

திருநெறிய தெய்வத் தமிழ்மாலை ஏழு மாலைகளாக வெளிவருகின்றன. மாலைகளில் ஒரேவகையான பூக்களைக் கொண்டு இண்டை, கொண்டை, கண்ணி, தார், தொடை முதலாகப் பல வரிசையாகக் கட்டுதலும் உண்டு.

பல நிறமுள்ள-பல வகையான மணமுள்ள பூக்களையும், இலைகளையும் கொண்டு விரவத் தொடுப்பதும் உண்டு. கலப்புணவில் சத்து இருக்கிறது என்கிற காலம் இது. கதம்ப மாலையில் கருத்தைப்பறிகொடுக்கிற காலம் இது. ஆதலால் இத்தமிழ்மாலை பன்னிரண்டு திருமுறைகளிலும், பிள்ளைத் தமிழ். திருப்புகழ் எல்லாம் விரவ, பலபண் விரவ - பலசந்தம் விரவ, பல பயன்களும் விரவத் தொடுக்கப் பெற்றுள்ளது.

நாள்தோறும், காலைமாலை அனுட்டானம் முடிந்த வுடனோ - அல்லது சிவபூசை முடிந்தவுடனோ நாளுக்கு ஒரு மாலையாக ஒருவாரமுழுதும் பாராயணம் செய்ய எளிமை யாகக் கோக்கப் பெற்றுள்ளன. ஒன்றிலே பன்னிரண்டு திருமுறைகளும் உள்ளன. சிவபூசகர்களிற் சிலர் தத்தம் ஆன்மார்த்தமூர்த்தியோடு, பாடல்பெற்ற சிவத்தலங்களில் உள்ள மூர்த்திகளில் ஒன்றை முறையே வைத்து வழிபட்டு, தாம் வழக்கமாக ஓதுகின்ற திருமுறைகளுடன் அந்தத் தலத்தின் பதிகத்தை முழுதும் ஓதிவழிபடுவதும் உண்டு, அதனாற் பெரும்பயன் சித்திப்பதைக் கண்டவர்கள். எல்லாத் தலங்களிலும் எல்லா மூர்த்திகளையும் வழிபட்ட பயன் சித்திப்பதற்காகத் திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்தது க்ஷேத்திரக்கோவைத்திருப்பதிகம். இதனைப் பாரா யணஞ்செய்தால் எல்லாத் தலங்களையும் சென்று வழிபட்ட பயன்கிடைக்கும். அதுவும் இம்மாலையில் இடம்பெற்றுள்ளது

விஷக்காய்ச்சல் போகவேண்டுமா? பாம்புகடித்தவன் பிழைக்க வேண்டுமா? அனைத்திற்கும் பதிகங்கள் உள்ளன.

இடர்கள் எப்படி வரும்? எந்த உருவில்-யார் மூலமாக வரும் என்று சொல்லமுடியாதே! எந்த வகையால் வந்தாலும் சரி, நெடுங்களப் பதிகத்தைப் பாராயணம் செய்து வந்தாற் போதும்.

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணி யராகப் பெறின்"

அசையாத - அசைக்க முடியாத உறுதி ஒன்றுதான் தேவை!

---

உ

திருச்சிற்றம்பலம்

# திருநெறிய தமிழ் மாலைகள்

## தொகுப்புரை

---

மன்றத்தின் இருபதாவது ஆண்டு நிறைவு விழாவிலே திருமுறைக் களஞ்சியங்களிலிருந்து திருமுறைப் பாடல்கள் திருமுறை வரிசையில் அள்ளி வழங்கப்பட்டன. இந்த வெள்ளி விழாவிலே பன்னிரண்டு திருமுறைப் பாடல்களும் ஒருங்கே அடுத்தடுத்துத் தொகுக்கப்பட்ட மாலைகளாக வழங்கப்படுகின்றன. இத்தொகுப்பு வருகிற தனுர் மாதத்தில் அன்றுடம் அன்பர்கள் ஆடி வீதி வலம் வரும்போது பாராயணஞ் செய்வதற்குப் பயன்படும்.

திருமுறைகளின் விளக்கம், சமயக்குரவர்கள், சந்தான குரவர்கள், சித்தாந்த சாத்திரங்கள், நாயன்மார்களுடைய விபரங்கள் முதலிய பயனுள்ள செய்திகள் இத்தொகுப்பின் சிறப்பு அம்சமாகும்.

இத் தொகுப்பில் 12 மாலைகள் அமைக்கவேண்டும் என்று எண்ணினேன். சுருங்கிய காலத்திற்குள் வெளிவரவேண்டி இருந்ததால் ஏழு மாலைகளே அமைக்க முடிந்தது. திருவருளினலே நூற்றுக்கணக்கான இத்தகைய மாலைகள் கொண்ட தொகுப்புகள் அடுத்தடுத்து இனி வெளிவரும் என்ற நம்பிக்கை நமக்கு உண்டு.

முன் செய்த சிவபுண்ணியத்தால் திருமுறைகளில் மிகவும் ஈடுபட்டிருக்கும், பாகனேரி சிவதர்மசீலர் சைவத்திருவாளர் **இராம. முத்துப்பழநியப்பச் செட்டியார்** அவர்கள் இத்தொகுப்பு வெளிவர ஆக்கந் தந்தார்கள். மன்றத்தின் பணியே தம் பணி என்று சிந்தையிலே கொண்டிருக்கும் அவர்கட்கு அடியேன் நன்றி சொல்வது உடன்பிறந்தார்க்கு நன்றி சொல்வதை ஒக்கும். அவர்களை வாழ்த்துகிறேன். முகவுரை தந்தருளி, எங்களை ஊக்குவித்த தகைமைசால் மகாவித்துவான் திரு. **ச. தண்டபாணி தேசிகர்** அவர்களை வணங்குகிறேன்.

மிக விரைவிலே இத் தொகுப்பை அச்சு வாகனமேற்றி அழகாக வெளிப்படுத்தித் தந்த "**மேவிசு**" அச்சகத்தார்க்குப் பொதுவாக வழக்கம்போல அளிக்கும் பாராட்டு உண்டு. சிறப்பாக இந்த அச்சகத்தின் உரிமையாளர் **கு. ஆறுமுகம்** அவர்கள் தொகுப்பாளருடைய உணர்ச்சிகளிலும் கவனத்திலும் பெரும் பங்கு எடுத்துக்கொண்டு ஒருமுகமாக, பசிநோக்காமலும் கண்துஞ்சாமலும் உழைத்துப் பெரும் புண்ணியம் ஈட்டிக் கொண்டார்கள். அவர்களுக்கு அங்கயற்கண்ணமை உடனுய ஆலவாயண்ணல் திருவருள் பாலிப்பாராக.

மதுரை,
30-11-78.

N. S. *சீனிவாசபிள்ளை*.

திருச்சிற்றம்பலம்

# திருநெறிய தமிழ்

**சைவ சமயாசாரியர் வணக்கம் :**

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் அடி போற்றி
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள் போற்றி.

**திருத்தொண்டர்கள், சேக்கிழார் நாயனார் வணக்கம் :**

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழார் அடிபோற்றி.

(சேக்கிழார் நாயனார் புராணம்)

**கணபதி வணக்கம் :**

திருவலிவலம் : திருவிராகம் : பண் – வியாழக்குறிஞ்சி.

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலம்உறை இறையே.

(முதல் திருமுறை)

**முருகன் வணக்கம் :**

திருக்கடம்பூர்த் திருக்கரக் கோயில் : திருக்குறுந்தொகை

1. நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே.

(ஐந்தாந் திருமுறை-19)

திருக்கோழம்பம் : திருக்குறுந்தொகை

2. சமர சூரபன் மாவைத் தடிந்தவேற்
குமரன் தாதைநற் கோழம்பம் மேவிய
அமரர் கோவினுக் கன்புடைத் தொண்டர்கள்
அமர லோகம தாளுடை யார்களே!

(ஐந்தாந் திருமுறை-64)

திருச்சிற்றம்பலம்.

---

உ
திருச்சிற்றம்பலம்

---

*சீர்காழியிலே திருத்தோணியப்பர் ஆலயத்துள் தீர்த்தக் கரையிலே உமாதேவியாராலே சிவஞானத்தின்னமுதம் ஊட்டப்பெற்ற திருஞானசம்பந்தப் பிள்ளையார், பாலரு வாயொடும் பொற்கிண்ணமேந்திய கரத்தொடும் நிற்கக் கண்டு "யார் தந்த பாலை உண்டாய்" என்று கடிந்த தந்தை சிவபாதவிருதயருக்கு, வானத்திலே இடபாரூட ராய் உமாதேவியாரோடு நின்றருளிய சிவபெருமானை உச்சிமேல் எடுத்தருளிய மென்விரலால் சுட்டிக்காட்டி "தோடுடைய செவியன்" என்றெடுத்துப் பாடுகிறார்.*

---

உ

திருச்சிற்றம்பலம்

# திருநெறிய தமிழ் மாலை - I

திருஞான சம்பந்த சுவாமிகள் அருளியது.

முதல் திருமுறை

## குருவருள்.

திருப்பிரமபுரம் பண் : நட்டபாடை

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 1

முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 2

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 3

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 4

ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்மிவனென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 5

மறைகலந்தவொலி பாடலோடாடல ராகிமழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழினீடுயர் சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 6

சடைமுயங்குபுன லன்அனலன்எரி வீசிச்சதிர்வெய்த
உடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்
கடன்முயங்குகழி சூழ்குளிர்கானலம் பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 7

வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர்கள்வன்
துயரிலங்கும்முல கிற்பலவூழிகள் தோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 8

தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்
நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 9

புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா
ஒத்தசொல்லவுல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயம்மிதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 10

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## 5

திருச்சிற்றம்பலம்

திருப்பிரமபுரம் பண் : வியாழக்குறிஞ்சி

### திருவெழுகூற்றிருக்கை

ஓருரு வாயினை, மானாங் காரத்
தீரியல் பாயொரு விண்முதல் பூதலம்
ஒன்றிய விருசுட ரும்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை,
இருவரோ டொருவ னாகி நின்றனை,
ஓரா னீழ லொண்கழ லிரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி
காட்டினை, நாட்ட மூன்றாகக் கோட்டினை,
இருநதி யரவமோ டொருமதி சூடினை,
ஒருதா ளீரயின் மூவிலைச் சூலம்
நாற்கான் மான்மறி யைந்தலை யரவம்
ஏந்தினை, காய்ந்த நால்வாய் மும்மதத்து
இருகோட் டொருகரி யீடழித் துரித்தனை,
ஒருதனு விருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானில மஞ்சக்
கொன்று தலத்துற வவுணரை யறுத்தனை,
ஐம்புல னாலா மந்தக் கரணம்
முக்குண மிருவளி யொருங்கிய வானோர்
ஏத்த நின்றனை, யொருங்கிய மனத்தோ
டிருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து
நான்மறை யோதி யைவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை,
அறுபத முரலும் வேணுபுரம் விரும்பினை,
இகலிய மைந்துணர் புகலி யமர்ந்தனை,
பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு விளங்கினை,
பாணிமூ வுலகும் புதையமேன் மிதந்த
தோணிபுரத் துறைந்தனை, தொலையா விருநிதி
வாய்ந்த பூந்தரா யேய்ந்தனை,

வரபுர மென்றுணர் சிரபுரத் துறைந்தனை,
ஒருமலை யெடுத்த விருதிற லரக்கன்
விறல்கெடுத் தருளினை, புறவம் புரிந்தனை,
முந்நீர்த் துயின்றோ னான்முக னறியாப்
பண்பொடு நின்றனை, சண்பை யமர்ந்தனை,
ஐயுறு மமணரும் அறுவகைத் தேரரும்
ஊழியு முணராக் காழி யமர்ந்தனை,
எச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை,
ஆறு பதமு மைந்தமர் கல்வியும்
மறைமுத னான்கும்
மூன்று காலமுந் தோன்ற நின்றனை,
இருமையி னொருமையு மொருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணிய னறியும்
அனைய தன்மையை யாதலி னின்னை
நினைய வல்லவ ரில்லைநீ ணிலத்தே

திருச்சிற்றம்பலம்

---

பதிக வரலாறு :

*சிவபாத விருதயர் தமது பூசைக் காலத்து நாடோறும் பிள்ளையாரது புத்தி முத்திகளைத் தரத்தக்க திருப்பதிகங்களை ஓதும் நியமமுடையவராய் இருத்தலையும், திருப்பதிகங்கள் நாளும் பெருகி எண்ணிறந்த வாதலின் அவர்க்கு அக்கருத்து முற்றுப்பெறுதல் அரிதாதலையும் அறிந்த பிள்ளையார், இத்திருவெழுகூற்றிருக்கையைத் திருவாய் மலர்ந்தருளித் தமது தந்தைக்கு அருளி, இதனை ஓதின் எல்லாப் பதிகங்களையும் ஓதிய பேறு உண்டாம் என்று கூறியருளினர்.*

---

திருச்சிற்றம்பலம்

## இரண்டாம் திருமுறை

திருக்ஷேத்திரக்கோவை பண் : இந்தளம்

ஆரூர் தில்லையம் பலம்வல் லம்நல்லம் வடகச் சியுமச் சிறு பாக்கம் நல்ல, கூரூர் குடவாயில் குடந்தை வெண்ணி கடல் சூழ்கழிப் பாலை தென்கோடி பீடார், நீரூர் வயல்நின்றியூர் குன்றியூருங் குருகா வையூர் நாரையூர் நீடுகானப், பேரூர் நன்னீள் வயல்நெய்த்தானமும் பிதற்றாய் பிறை சூடிதன் பேரிடமே. 1

மனவஞ்சர் மற்றோட முன்மாத ராரும் மதிகூர் திருக்கூட லில் ஆலவாயும், இனவஞ் சொலிலா இடைமா மருதும் இரும்பைப் பதிமாகாளம் வெற்றியூரும், கனமஞ் சினமால் விடையான் விரும்புங் கருகாவூர் நல்லூர்பெரும் புலியூர், தனமென் சொலிற்றஞ்ச மென்றே நினைமின் தவமாம் மலமா யினதா னறுமே. 6

அம்மானை யருந்தவ மாகி நின்ற அமரர் பெருமான் பதியான வுன்னிக், கொய்ம்மா மலர்ச்சோலை குலாவு கொச் சைக் கிறைவன் சிவஞான சம்பந்தன் சொன்ன, இம்மாலை யீரைந்தும் இரு நிலத்தில் இரவும் பகலுந் நினைந்தேத்தி நின்று, விம்மா வெருவா விரும்பும் அடியார் விதியார் பிரியார் சிவன்சே வடிக்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

குறிப்பு :

*இதனை ஓதின் சிவன் உறை பல பதிகளை சிந்தித்த பலன் உண்டாகும்.*

---

திருச்சிற்றம்பலம்

மூன்ரும் திருமுறை

திருவாவடுதுறை பண் : காந்தாரபஞ்சமம்

நாலடிமேல்வைப்பு.

இடரினுந் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 1

வாழினுஞ் சாவினும் வருந்தினும்போய்
வீழினும் உனகழல் விடுவேனல்லேன்
தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்
போழிள மதிவைத்த புண்ணியனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 2

நனவினுங் கனவினும் நம்பாவுன்னை
மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனலெரி யனல்புல்கு கையவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 3

தும்மலோ டருந்துயர் தோன்றிடினும்
அம்மலர் அடியலால் அரற்று தென்நாக்
கைமல்கு வரிசிலைக் கணையொன்றினால்
மும்மதில் எரியெழ முனிந்தவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 4

கையது வீழினுங் கழிவுறினும்
செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்
கொய்யணி நறுமலர் குலாயசென்னி
மையணி மிடறுடை மறையவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 5

வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்
எந்தாயுன் அடியலால் ஏத்தாதென் நா
ஐந்தலை யரவுகொண் டரைக்கசைத்த
சந்தவெண் பொடியணி சங்கரனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 6

வெப்பொடு விரவியோர் வினைவரினும்
அப்பாவுன் னடியலால் அரற்றுதென் நா
ஒப்புடை யொருவனை யுருவழிய
அப்படி யழலெழ விழித்தவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 7

பேரிடர் பெருகியோர் பிணிவரினுஞ்
சீருடைக் கழல் அலாற் சிந்தைசெய்யேன்
ஏருடை மணிமுடி இராவணனை
ஆரிடர் படவரை யடர்த்தவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 8

உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்
ஒண்மல ரடியலால் உரையாதென் நாக்
கண்ணனுங் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்பரி தாயவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 9

பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்
அத்தாவுன் அடியலால் அரற்றுதென் நாப்
புத்தருஞ் சமணரும் புறனுரைக்கப்
பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே
இதுவோஎமை யாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுனதின் னருள் ஆவடுதுறை யரனே. 10

அலைபுனல் ஆவடு துறையமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்இறையை
நலம்மிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை யருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயின நீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் னேறுவர் நிலமிசை நிலையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பதிக வரலாறு :

*திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருவாவடுதுறையை அடைந்தபோது அவரது தந்தையார் சிவபாதவிருதயர் யாகத்திற்குப் பொருள் வேண்டினர். பிள்ளையார் கோயிலிற் சென்று வணங்கி "இடரினும் தளரினும்" என்று தொடங்கும் இப்பதிகத்தைப் பாடியருளினர். அப்பொழுது சிவபெருமான் திருவருளினலே ஒரு சிவபூதம் விரைந்து வந்து பலிபீடத்தின்மீது ஆயிரம் பொன்னுள்ள ஒரு பொற்கிழியை வைத்து "இது உலவாப் பொற்கிழி - சிவபெருமானருளினலே உமக்கு அளிக்கப்பட்டது" என்றுசொல்லி மறையவும் பிள்ளையார் அதனைத் தந்தையாரிடம் அளித்து யாகத்தைச் செய்யுமாறு கூறினர்.*

*இம்முழுப்பதிகத்தையும் பக்தி சிரத்தையுடன் ஓதிவரின் பொருள் முட்டுப்பாடு உண்டாகாது என்பது திண்ணம்.*

உ

திருச்சிற்றம்பலம்

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியது.

நான்காம் திருமுறை

# கூற்றுவரும்.

திருஅதிகை வீரட்டானம் பண் : கொல்லி

கூற்றாயின வாறு விலக்ககிலீர்
கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேனடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 1

நெஞ்சம்உமக் கேயிட மாகவைத்தேன்
நினையாதொரு போதும் இருந்தறியேன்
வஞ்சம்இது வொப்பது கண்டறியேன்
வயிற்றோடு துடக்கி முடக்கியிட
நஞ்சாகிவந் தென்னை நலிவதனை
நணுகாமற் றுரந்து கரந்துமிடீர்
அஞ்சேலுமென் னீரதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 2

பணிந்தாரன பாவங்கள் பாற்றவல்லீர்
படுவெண்டலை யிற்பலி கொண்டுழல்வீர்
துணிந்தேயுமக் காட்செய்து வாழலுற்றாற்
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்
பிணிந்தார்பொடி கொண்டுமெய் பூசவல்லீர்
பெற்றமேற்றுகந் தீர்சுற்றும் வெண்டலைகொண்(டு)
அணிந்தீரடி கேளதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 3

முன்னம்அடி யேனறி யாமையினால்
முனிந்தென்னை நலிந்து முடக்கியிடப்
பின்னையடி யேனுமக் காளும்பட்டேன்
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்
தன்னையடைந் தார்வினை தீர்ப்பதன்றோ
தலையாயவர் தங்கட னாவதுதான்
அன்னநடை யாரதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 4

காத்தாள்பவர் காவ லிகழ்ந்தமையாற்
கரைநின்றவர் கண்டுகொ ளென்றுசொல்லி
நீத்தாய கயம்புக நூக்கியிட
நிலைக்கொள்ளும் வழித்துறை யொன்றறியேன்
வார்த்தையிது வொப்பது கேட்டறியேன்
வயிற்றோடு துடக்கி முடக்கியிட
ஆர்த்தார்புன லாரதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 5

சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்
தமிழோடிசை பாடல் மறந்தறியேன்
நலந்தீங்கிலும் உன்னை மறந்தறியேன்.
உன்னாமம்என் நாவில் மறந்தறியேன்
உலந்தார்தலை யிற்பலி கொண்டுழல்வாய்
உடலுள்ளுறு சூலை தவிர்த்தருளாய்
அலந்தேனடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 6

உயர்ந்தேன்மனை வாழ்க்கையும் ஒண்பொருளும்
ஒருவர்தலை காவ லிலாமையினால்
வயந்தேயுமக் காட்செய்து வாழலுற்றால்
வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர்
பயந்தேயென் வயிற்றி னகம்படியே
பறித்துப்புரட் டியறுத் தீர்த்திடநான்
அயர்ந்தேனடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 7

வலித்தேன்மனை வாழ்க்கை மகிழ்ந்தடியேன்
வஞ்சம்மன மொன்று மிலாமையினால்
சலித்தாலொரு வர்துணை யாருமில்லைச்
சங்கவெண்குழைக் காதுடை யெம்பெருமான்
கலித்தேயென் வயிற்றி னகம்படியே
கலக்கிமலக் கிட்டுக் கவர்ந்துதின்ன
அலுத்தேனடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 8

பொன்போல மிளிர்வதோர் மேனியினீர்
புரிபுன்சடை யீர்மெலி யும்பிறையீர்
துன்பேகவ லைபிணி யென்றிவற்றை
நணுகாமற் றுரந்து கரந்துமிடீர்
என்போலிகள் உம்மை இனித்தெளியார்
அடியார்படு வதிது வேயாகில்
அன்பேயமையும் அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 9

போர்த்தாயங்கொ ரானையின் ஈருரிதோல்
புறங்காடரங் காநட மாடவல்லாய்
ஆர்த்தானரக் கன்றனை மால்வரைக்கீழ்
அடர்த்திட்டருள் செய்த அதுகருதாய்
வேர்த்தும்புரண்டும் விழுந்தும் எழுந்தால்என்
வேதனை யான விலக்கியிடாய்
ஆர்த்தார் புனல் சூழ்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே. 10

திருச்சிற்றம்பலம்

இப்பதிகம் சூலைநோய் நீங்க ஓதியருளியது.

---

உ

திருச்சிற்றம்பலம்

## ஐந்தாம் திருமுறை

கோயில் திருக்குறுந்தொகை

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னன் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே. 1

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனுர்க்
கெல்லை யில்லாதோ ரடிமைபூண் டேனுக்கே. 4

## ஆறும் திருமுறை

கோயில் பெரியதிருத்தாண்டகம்

அரியானை அந்தணர் தம் சிந்தை யானை அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும், தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத் திகழொளியைத் தேவர்கள்தங் கோனை மற்றைக், கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற, பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப், பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. 1

அருந்துணையை அடியார்தம் அல்லல்தீர்க்கும் அரு மருந்தை அகல்ஞாலத் தகத்துள் தோன்றி, வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும்விட்டு, வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும், பொருந்தணைமேல் வரும்பயனைப் போகமாற்றிப் பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும், பெருந்துணை யைப் பெரும்பற்றப் புலியூ ரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே. 5

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது

## ஏழாம் திருமுறை

---

### குருவருள்

திருவெண்ணெய்நல்லூர் பண் : இந்தளம்

பித்தாபிறை சூடிபெரு மானேஅரு ளாளா,
எத்தால்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை,
வைத்தாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்
[அருட்டுறையுள்,
அத்தாஉனக் காளாய்இனி அல்லேன்எனல் ஆமே. 1

நாயேன்பல நாளும்நினைப் பின்றிமனத் துன்னைப்,
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாஅருள் பெற்றேன்,
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்
[அருட்டுறையுள்,
ஆயாஉனக் களாய்இனி அல்லேன்எனல் ஆமே. 2

மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னைப்,
பொன்னேமணி தானேவயி ரம்மேபொரு துந்தி,
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்
[அருட்டுறையுள்
அன்னேஉனக் காளாய்இனி அல்லேன்எனல் ஆமே. 3

முடியேன்இனிப் பிறவேன்பெறின் மூவேன்பெற்றம் ஊர்தீ,
கொடியேன்பல பொய்யேஉரைப் பேனைக்குறிக் கொள்நீ,
செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்
[அருட்டுறையுள்,
அடிகேள்உனக் களாய்இனி அல்லேன்எனல் ஆமே. 4

பாதம்பணி வார்கள்பெறும் பண்டம்அது பணியாய்,
ஆதன்பொருள் ஆனேன்அறி வில்லேன்அரு ளாளா, [யுள்,
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர் அருட்டுறை
ஆதீஉனக் காளாய்இனி அல்லேன்எனல் ஆமே. 5

தண்ணார்மதி சூடீதழல் போலும்திரு மேனீ,
எண்ணார்புரம் மூன்றும்எரி உண்ண நகை செய்தாய், [டுறையுள்,
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய்நல்லூர் அருட்
அண்ணாஉனக் காளாய்இனி அல்லேன்எனல் ஆமே. 6

ஊனாய்உயிர் ஆனாய்உடல் ஆனாய்உல கானாய்,
வானாய்நிலன் ஆனாய்கடல் ஆனாய்மலை ஆனாய், [டுறையுள்,
தேனார் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட்
ஆனாய்உனக் காளாய்இனி அல்லேன் எனல் ஆமே. 7

ஏற்றார்புரம் மூன்றும்எரி உண்ணச்சிலை தொட்டாய்,
தேற்றாதன சொல்லித்திரி வேனோசெக்கர் வானீர், [டுறையுள்,
ஏற்றாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர் அருட்
ஆற்றாய்உனக் காளாய்இனி அல்லேன்எனல் ஆமே. 8

மழுவாள்வலன் ஏந்தீமறை ஓதீமங்கை பங்கா,
தொழுவார்அவர் துயர்ஆயின தீர்த்தல்உன தொழிலே,
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட்
[டுறையுள்,
அழகாஉனக் காளாய்இனி அல்லேன் எனல் ஆமே. 9

காரூர்புனல் எய்திக்கரை கல்லித்திரைக் கையால்,
பாரூர்புகழ் எய்தித் திகழ் பன்மாமணி உந்திச், [டுறையுள்,
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட்
ஆரூரன்எம் பெருமாற்காள் அல்லேன்எனல் ஆமே. 10

திருச்சிற்றம்பலம்

*சிவபெருமான் தம்மைத் தடுத்தாட் கொண்டபோது அவர் கட்டளையிட்டபடியே பாடிய முதல் பாடல்.*

---

உ

திருச்சிற்றம்பலம்

## மாணிக்கவாசக சுவாமிகள் அருளியது.

எட்டாம் திருமுறை — திருவாசகம்

### சிவபுராணம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க

வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க

ஈச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி

ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே

வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே

ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே

கறந்தபால் கன்னலொடு நெய்கலந் தாற்போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுஅழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய

விளங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தில்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று

போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே

அல்லற் பிறவி அறுப்பானே யோஎன்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

---

உ

## * திருக்கோவையார்

---

திருவளர் தாமரை சீர்வளர்
காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையொர் வல்லியின்
ஒல்கி அனநடை வாய்ந்(து)
உருவளர் காமன்தன் வென்றிக்
கொடிபோன்(று) ஒளிர்கின்றதே!

திருச்சிற்றம்பலம்

---

* குறிப்பு :

*"பாவை பாடிய வாயால் கோவை பாடுக" என்ற சிவபெருமானின் ஆணைக்கிணங்க மணிவாசகரால் அருளிச்செய்யப்பட்டது.*

---

உ

திருச்சிற்றம்பலம்

## ஒன்பதாம் திருமுறை

### திருமாளிகைத் தேவர் அருளிய
### திருவிசைப்பா

கோயில் பண் : பஞ்சமம்

ஒளிவளர் விளக்கே! உலப்பிலா ஒன்றே!
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே!
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே!
சித்தத்துள் தித்திக்குந் தேனே!
அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே!
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

---

### சேந்தனர் அருளிய
### திருப்பல்லாண்டு

கோயில் பண் : பஞ்சமம்

மன்னுக தில்லை! வளர்கநம் பத்தர்கள்!
வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து
புவனியெல் லாம்விளங்க
அன்ன நடைமட வாள்உமை கோன்அடி
யோமுக் கருள்புரிந்து
பின்னைப் பிறவியறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே.

---

## பத்தாம் திருமுறை

### திருமூலநாயனர் அருளிய
### திருமந்திரம்

சிவனெடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனெடொப் பார் இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னெளி மின்னுந்
தவனச் சடைமுடித் தாமரை யானே.

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

## பதினோராம் திருமுறை

## திருவாலவாயுடையார் அருளியது

### திருமுகப் பாசுரம்

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிற(கு)
அன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்;

பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்(கு)
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்குஞ் சேரலன் காண்க;

பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

---

## பன்னிரண்டாம் திருமுறை

## சேக்கிழார் சுவாமிகள் அருளியது

### பெரிய புராணம்

ஆதியாய் நடுவும்ஆகி அளவிலா அளவும்ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித்தோன்றிய பொருளும்ஆகிப்
பேதியா ஏகம்ஆகிப் பெண்ணுமாய் ஆணும்ஆகிப்
போதியா நிற்கும்தில்லைப் பொதுநடம்போற்றி! போற்றி!

கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடம்செய்கின்ற பூங்கழல்போற்றி! போற்றி!

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

## ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய

## மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

---

கைத்தல மோடிரு கரடக் கரைத்திரை
கக்குக டாமுடை கடலிற் குளித்தெமர்
சித்தம தாமொரு தறியிற் றுவக்குறு
சித்திவி நாயக னிசையைப் பழிச்சுதும்
புத்தமு தோவரு டழையத் தழைத்ததொர்
பொற்கொடி யோவென மதுரித் துவட்டெழு
முத்தமிழ் தேர்தரு மதுரைத் தலத்துறை
முத்தன மேவுபெ ணரசைப் புரக்கவே.

---

## அருணகிரிநாத சுவாமிகள் அருளிய

## திருப்புகழ்

---

உனைத்தி னந்தொழு திலனுன தியல்பினை
உரைத்திலன் பல மலர்கொடு னடியிணை
உறப்ப ணிந்தில னொருதவ மிலனுன தருள்மாறு—
உளத்து ளன்பின ருறைவிட மறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும்வலம் வருகிலன்
உவப்பொ டுன்புகழ் துதிசெயவிழைகிலன் மலைபோலே;

கனைத்தெ ழும்பக டதுபிடர் மிசைவரு
　கறுத்த வெஞ்சின மறலித னுழையினர்
　கதித்த டர்ந்தெறி கயிறடு கதைகொடு　பொருபோதே-

கலக்கு றுஞ்செய லொழிவற அழிவுறு
　கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
　கணத்தி லென்பய மறமயில் முதுகினில் வருவாயே;

வினைத்த லந்தனி லலகைகள் குதிகொள
　விழுக் குடைந்துமெ யுகுதசை கழுகுண
　விரித்த குஞ்சிய ரெனுமவு ணரையமர்　புரிவேலா-

மிகுத்த பண்பயில் குயில்மொழி யழகிய
　கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
　விரைத்த சந்தனம்ருகமத புயவரையுடையோனே;

தினத்தி னஞ்சதுர் மறைமுநி முறைகொடு
　புனற்சொ ரிந்தலர் பொதிய விணவரொடு
　சினத்தை நிந்தனை செயுமுநி வரர்தொழ மகிழ்வோனே-

தெனத்தெ னந்தன எனவரி யளிநறை
　தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில்திகழ்
　திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே.

திருச்சிற்றம்பலம்

---

ஆகப் பாடல்கள் : 68



உ

திருச்சிற்றம்பலம்

மாலை II                                                  முதல் திருமுறை

திருநள்ளாறும் திருவாலவாயும்                         பண் : நட்டபாடை

பாடக மெல்லடிப் பாவையோடும்
படுபிணக் காடிடம் பற்றிநின்று
நாடக மாடுநள் ளாறுடைய
நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
சூடக முன்கை மடந்தைமார்க
டுணைவ ரொடுந்தொழு தேத்திவாழ்த்த
ஆடக மாட நெருங்குகூட
லாலவா யின்க ணமர்ந்தவாறே. 1

பூவினில் வாசம் புனலிற்பொற்புப்
புதுவிரைச் சாந்தினி னுற்றத்தோடு
நாவினிற் பாடல்நள் ளாறுடைய
நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
தேவர்க டானவர் சித்தர்விச்சா
தரர்கணத் தோடுஞ் சிறந்துபொங்கி
ஆவினி லைந்துகந் தாட்டுங்கூட
லாலவா யின்க ணமர்ந்தவாறே. 4

கோவண வாடையு நீறுபூச்சுங்
கொடுமழு வேந்தலுஞ் செஞ்சடையும்
நாவணப் பாட்டுநள் ளாறுடைய
நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
பூவண மேனி யிளையமாதர்
பொன்னும் மணியுங் கொழித்தெடுத்து
ஆவண வீதியி லாடுங்கூட
லாலவா யின்க ணமர்ந்தவாறே. 7

இலங்கை யிராவணன் வெற்பெடுக்க
எழில்விர லூன்றி யிசைவிரும்பி
நலங்கொளச் சேர்ந்தநள் ளாறுடைய
நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
புலன்களைச் செற்றுப் பொறியைநீக்கிப்
புந்தியி லுந்நினைச் சிந்தைசெய்யும்
அலங்கல் நல்லார்க ளமருங்கூடல்
ஆலவா யின்க ணமர்ந்தவாறே. 8

அன்புடை யானை யரனைக்கூடல்
ஆலவாய் மேவிய தென்கொலென்று
நன்பொனை நாதனை நள்ளாற்றானை
நயம்பெறப் போற்றி நலங்குலாவும்
பொன்புடை சூழ்தரு மாடக்காழிப்
பூசுரன் ஞானசம் பந்தன்சொன்ன
இன்புடைப் பாடல்கள் பத்தும்வல்லார்
இமையவ ரேத்த இருப்பர்தாமே. 11

பதிக வரலாறு :

மதுரையில் சைவஸ்தாபனம் செய்து சோழநாடு திரும்பிய சம்பந்தப்பெருமான் தென்னன் முன் அமணர் செய்த வாதில் தீயின் கண் இட்ட "போகமார்த்த" என்னும் நள்ளாற்றுப் பதிகவேடு பச்சையாக்கித் தன்னுள்ளத் துணையாகி ஆலவாயில் அமர்ந்திருந்த சிவபெருமான் திருவருளை வியந்து பாடியது.

---

இரண்டாம் திருமுறை

திருப்பிரமபுரம் பண் : சீகாமரம்

எம்பிரான் எனக்கமுத மாவானுந் தன்னடைந்தார்
தம்பிரான் ஆவானுந் தழலேந்து கையானுங்
கம்பமா கரியுரித்த காபாலி கறைக்கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே. 1

எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்(கு)
இங்கேயென் றருள்புரியும் எம்பெருமான் எருதேறிக்
கொங்கேயும் மலர்ச்சோலைக் குளிர்பிரம புரத்துறையுஞ்
சங்கேயொத் தொளிர்மேனிச் சங்கரன்றன் தன்மைகளே. 6

தன்னடைந்தார்க் கின்பங்கள் தருவானைத் தத்துவனைக்
கன்னடைந்த மதிற்பிரம புரத்துறையுங் காவலனை
முன்னடைந்தான் சம்பந்தன் மொழிபத்து மிவைவல்லார்
பொன்னடைந்தார்; போகங்கள் பலவடைந்தார்; புண்ணியரே. 11

திருச்சிற்றம்பலம்

உ
திருச்சிற்றம்பலம்

## மூன்றாம் திருமுறை

திருப்பூவணம் பண் : காந்தாரபஞ்சமம்

மாதமர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவ ணத்துறை
வேதனை விரவலர் அரணம் மூன்றெய்த
நாதனை யடிதொழ நன்மை யாகுமே. 1

வெந்துய ருறுபிணி வினைகள் தீர்வதோர்
புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை
அந்திவெண் பிறையினோ டாறு சூடிய
நந்தியை யடிதொழ நன்மை யாகுமே. 3

புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை
அண்ணலை யடிதொழு தந்தண் காழியுள்
நண்ணிய அருமறை ஞானசம் பந்தன்
பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே. 11

---

## நான்காம் திருமுறை

பொது பண் : பியந்தைக்காந்தாரம்

### சிவனெனுமோசை

சிவனெனும் ஓசை யல்ல தறையோ வுலகில் திருநின்ற செம்மை யுளதே, அவனுமோ ரைய முண்ணி யதளாடை யாவ ததன் மேலோ ராட லரவம், கவணள வுள்ள வுள்கு கரிகாடு கோயில் கலனாவ தோடு கருதில், அவனது பெற்றி கண்டு மவன் நீர்மை கண்டு மகனேர்வர் தேவ ரவரே. 1

விரிகதிர் ஞாயி றல்லர் மதியல்லர் வேத விதியல்லர் விண்ணும் நிலனும், திரிதரு வாயு வல்லர் செறுதீயு மல்லர் தெளிநீரு மல்லர் தெரியில், அரிதரு கண்ணி யாளை ஒருபாக மாக அருள்கா ரணத்தில் வருவார், எரியர வார மார்பர் இமையாரும் அல்லர் இமைப்பாரும் அல்லர் இவரே. 2

புதுவிரி பொன்செ யோலை யொருகாதோர் காது சுரி சங்கம் நின்றுபுரள, விதிவிதி வேத கீத மொருபாடு மோத மொருபாடு மெல்ல நகுமால், மதுவிரி கொன்றை துன்று சடைபாக மாதர் குழல்பாக மாக வருவர், இது இவர் வண்ண வண்ணம் இவள் வண்ண வண்ணம் எழில் 10
வண்ண வண்ணம் இயல்பே.

---

## ஐந்தாம் திருமுறை

கோயில் — திருக்குறுந்தொகை

பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்து வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ. 1

முழுதும் வானுல கத்துள தேவர்கள்
தொழுதும் போற்றியுந் தூயசெம் பொன்னினால்
எழுதி மேய்ந்தசிற் றம்பலக் கூத்தனை
இழுதை யேன்மறந் தெங்கனம் உய்வனோ. 8

---

## ஆறாம் திருமுறை

திருக்காளத்தி — திருத்தாண்டகம்

மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான் வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர், இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின் மேலான் ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொன், புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான் பொருப் பிடையான் நெருப்பிடையான் காற்றினுள்ளான், கனத்தகத்தான் கயிலாயத் துச்சியுள்ளான் காளத்தியானவனென் கண்ணு ளானே.

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

## ஏழாம் திருமுறை

திருப்பாச்சிலாச்சிராமம் பண் : தக்கராகம்

வைத்தனன் தனக்கே தலையும்என் னாவும்
நெஞ்சமும் வஞ்சம்ஒன் றின்றி,
உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை
உரைத்தக்கால் உவமனே ஒக்கும்,
பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்,
பித்தரே ஒத்தோர் நச்சில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 1

அன்னையே என்னேன் அத்தனே என்னேன்
அடிகளே அமையுமென் றிருந்தேன்,
என்னையும் ஒருவன் உ..ளன்என்று கருதி
இறைஇறை திருவருள் காட்டாய்,
அன்னமாம் பொய்கை சூழ்தரு பாச்சி
லாச்சிரா மத்துறை அடிகள்,
பின்னையே அடியார்க் கருள்செய்வ தாகில்
இவரலா தில்லையோ பிரானார். 2

ஏசின அல்ல இகழ்ந்தன அல்ல
எம்பெரு மானென்றெப் போதும்,
பாயின புகழான் பாச்சிலாச் சிராமத்
தடிகளை அடிதொழப் பன்னாள்,
வாயினாற் கூறி மனத்தினால் நினைவான்
வளவயல் நாவல் ஆரூரன்,
பேசின பேச்சைப் பொறுக்கில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 12

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

## எட்டாம் திருமுறை

## திருவாசகம்

தனித்துணை நீநிற்க யான்தருக் கித்தலை யால்நடந்த
வினைத்துணை யேனை விடுதிகண் டாய்வினை யேனுடைய
மனத்துணையே என்தன்வாழ் முதலே எனக்கெய்ப்பில் வைப்பே
தினைத்துணையேனும் பொறேன்துய ராக்கையின் தின்வலையே.

ஏசினும் யானுன்னை யேத்தினும் என்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண் டாய்செம் பவளவெற்பின்
தேசுடை யாயென்னை ஆளுடை யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின ஆலமுண் டாய்அமு துண்ணக் கடையவனே.

பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண்ட லத்தீசன்
கண்சுமந்த நெற்றிக்கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்.

---

## திருக்கோவையார்

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தையுள்ளும்
உறைவா னுயர்மதிற் கூடலின் ஆய்ந்தவொண் தீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடவரைத் தோட்கென்கொ லாம்புகுந் தெய்தியதே.

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

## ஒன்பதாம் திருமுறை

### திருவிசைப்பா

கோயில் பண் : பஞ்சமம்

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்,
கரையிலாக் கருணைமா கடலை,
மற்றவர் அறியா மாணிக்க மலையை,
மதிப்பவர் மனமணி விளக்கைச்,
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண் டுள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே.

---

### திருப்பல்லாண்டு

கோயில் பண் : பஞ்சமம்

சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த
தூய்மனத் தொண்டருள்ளீர்!
சில்லாண் டிற்சிதை யும்சில தேவர்
சிறுநெறி சேராமே
வில்லாண்டகன கத்திரள் மேரு
விடங்கன் விடைப்பாகன்
பல்லாண் டென்னும் பதங்கடந் தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

## பத்தாம் திருமுறை

மந்திர மாவதும் மாமருந் தாவதுந்
தந்திர மாவதுந் தானங்க ளாவதுஞ்
சுந்தர மாவதுந் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்தன் இணையடி தானே.

---

## பதினோராம் திருமுறை

### பொன்வண்ணத்தந்தாதி

வருகின்ற மூப்பொடு தீப்பிணிக்
கூற்றம்வை கற்குவைகல்
பொருகின்ற போர்க்கொன்றும் ஆற்றகில்
லேன்பொடி பூசிவந்துன்
அருகொன்றி நிற்க அருளுகண்
டாய்அழல் வாய்அரவம்
வெருகொன்ற வெண்மதி செஞ்சடை
மேல்வைத்த வேதியனே.

---

## பன்னிரண்டாம் திருமுறை

### பெரியபுராணம்

ஆலமே அமுத மாக உண்டுவா னவர்க்க ளித்துக்,
காலனை மார்க்கண் டர்க்காக் காய்ந்தனை; அடியேர்க்கின்று,
ஞாலம்நின் புகழே யாக வேண்டும்; நான் மறைகள் ஏத்தும்,
சீலமே! ஆல வாயிற் சிவபெரு மானே! " என்றார்.

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

## மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

முகமதி யூடெழு நகைநில வாட
முடிச்சூ ழியமாட
முரிபுரு வக்கொடி நுதலிடு சுட்டி
முரிப்பொ டசைந்தாட

இகல்விழி மகரமு மம்மக ரம்பொரும்
இருமக ரமுமாட
இடுநூ புரவடி பெயரக் கிண்கி
ணைனுங்கிண் கிணியாடத்

துகிலொடு சோர்தரு கொடிநுண் மருங்குல்
துவண்டு துவண்டாடத்
தொந்தி சரிந்திட வுந்தி கரந்தொளிர்
சூலுடை யாலடைமற்(று)

அகில சராசர நிகிலமொ டாடிட
ஆடுக செங்கீரை
அவனி தழைத்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை.

---

## திருப்புகழ்

அந்தகன்வ ருந்தினம் பிறகிடச்
சந்ததமும் வந்துகண் டரிவையர்க்
கன்புருகு சங்கதந் தவிரமுக் குணமாள-
அந்திபக லென்றிரண் டையுமொழித்
திந்திரிய சஞ்சலங் களையறுத்(து)
அம்புய பதங்களின் பெருமையைக் கவிபாடிச்;

செந்திலை யுணர்ந்துணர்ந் துணர்வுறக்
கந்தனை யறிந்தறிந் தறிவினிற்
சென்றுசெரு குந்தடந் தெளிதரத் தணியாத-
சிந்தையு மவிழ்ந்தவிழ்ந் துரையொழித்(து)
என்செய லழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவர என்றுநின் தெரிசனைப் படுவேனோ;

கொந்தவிழ் சரண்சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறஅரக் கருமாளக்-
குன்றிடிய அம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீசத்;

தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான-
சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததிச கந்தொழுஞ் சரவணப் பெருமாளே.

திருச்சிற்றம்பலம்

---



உ

திருச்சிற்றம்பலம்



திருவாழ்கொளிபுத்தூர்　　　　　　　　பண் : தக்கராகம்

பொடியுடைமார்பினர் போர்விடையேறிப்
　　பூதகணம் புடைசூழக்
கொடியுடையூர்திரிந் தையங்
　　கொண்டு பலபலகூறி
வடிவுடை வாணெடுங் கண்ணுமைபாகம்
　　ஆயவன்வாழ்கொளி புத்தூர்க்
கடிகமழ் மாமலரிட்டுக்
　　கறைமிடற்றானடி காண்போம். 1

பூணெடுநாகம் அசைத்தனலாடிப்
　　புன்றலையங்கையி லேந்தி
ஊணிடுபிச்சையூ ரையம்
　　உண்டியென்று பலகூறி
வாணெடுங்கண்ணுமை மங்கையொர்பாகம்
　　ஆயவன் வாழ்கொளி புத்தூர்த்
தாணெடு மாமலரிட்டுத்
　　தலைவனதாணிழல் சார்வோம். 3

கனமலர்க்கொன்றை யலங்கலிலங்கக்
　　காதிலொர் வெண்குழையோடு
புனமலர்மாலை புனைந்தூர்
　　புகுதியென்றே பலகூறி
வனமுலைமாமலை மங்கையொர்பாகம்
　　ஆயவன்வாழ்கொளி புத்தூர்
இனமலரேய்ந்தன தூவி
　　யெம்பெருமானடி சேர்வோம். 5

குண்டமணர்துவர்க் கூறைகண் மெய்யிற்
கொள்கையினார் புறங்கூற
வெண்டலையிற்பலி கொண்டல்
விரும்பினையென்று விளம்பி
வண்டமர்பூங்குழன் மங்கையொர்பாகம்
ஆயவன்வாழ்கொளி புத்தூர்த்
தொண்டர்கண் மாமலர்தூவத்
தோன்றிநின்றானடி சேர்வோம். 10

கல்லுயர்மாக்கட னின்றுமுழங்குங்
கரைபொரு காழியமூதூர்
நல்லுயர்நான்மறை நாவி
னற்றமிழ் ஞானசம்பந்தன்
வல்லுயர்சூலமும் வெண்மழுவாளும்
வல்லவன்வாழ்கொளி புத்தூர்ச்
சொல்லியபாடல்கள் வல்லார்
துயர்கெடுதல்லெளி தாமே. 11

---

## இரண்டாம் திருமுறை

பொது — பண் : பியந்தைக்காந்தாரம்

### கோளறு திருப்பதிகம்

வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கை முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
ஞாயிறுதிங்கள்செவ்வாய் புதன்வியாழம்வெள்ளி
சனிபாம்பிரண்டுமுடனே
ஆசறுநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 1

என்பொடுகொம்பொடாமை யிவைமார்பிலங்க
எருதேறி யேழையுடனே
பொன்பொதிமத்தமாலை புனல்சூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனால்
ஒன்பதொடொன்றொடேழு பதினெட்டொடாறு
முடனாய நாள்களவைதாம்
அன்பொடுநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 2

உருவளர்பவளமேனி யொளிநீறணிந்து
வுமையோடும்வெள்ளைவிடைமேல்
முருகலர்கொன்றைதிங்கள் முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
திருமகள்கலையதூர்தி செயமாதுபூமி
திசைதெய்வமான பலவும்
அருநெதிநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 3

மதிநுதல்மங்கையோடு வடபாலிருந்து
மறையோதுமெங்கள்பரமன்
நதியொடுகொன்றைமாலை முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தவதனால்
கொதியுறுகாலனங்கி நமனோடுதூதர்
கொடுநோய்களானபலவும்
அதிகுணநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 4

நஞ்சணிகண்டனெந்தை மடவாள்தனோடும்
விடையேறுநங்கள்பரமன்
துஞ்சிருள்வன்னிகொன்றை முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தவதனால்
வெஞ்சினவவுணரோடு முருமிடியுமின்னு
மிகையானபூதமவையும்
அஞ்சிடுநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 5

வாள்வரியதளதாடை வரிகோவணத்தர்
மடவாள்தனோடுமுடனாய்
நாண்மலர்வன்னிகொன்றை நதிசூடிவந்தென்
உளமேபுகுந்தவதனால்
கோளரியுழுவையோடு கொலையானைகேழல்
கொடுநாகமோடுகரடி
ஆளரிநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 6

செப்பிளமுலைநன்மங்கை யொருபாகமாக
விடையேறுசெல்வனடைவார்
ஒப்பிளமதியுமப்பு முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தவதனால்
வெப்பொடுகுளிரும்வாத மிகையானபித்தும்
வினையானவந்துநலியா
அப்படிநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 7

வேள்படவிழிசெய்தன்று விடைமேலிருந்து
மடவாள்தனோடுமுடனாய்
வாண்மதிவன்னிகொன்றை மலர்சூடிவந்தென்
உளமேபுகுந்தவதனால்
ஏழ்கடல்சூழிலங்கை யரையன்றனோடு
மிடரானவந்துநலியா
ஆழ்கடனல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 8

பலபலவேடமாகும் பரனாரிபாகன்
பசுவேறுமெங்கள்பரமன்
சலமகளோடெருக்கு முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தவதனால்
மலர்மிசையோனுமாலு மறையோடுதேவர்
வருகாலமானபலவும்
அலைகடல்மேருநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 9

கொத்தலர்குழலியோடு விசையற்குநல்கு
குணமாயவேடவிகிர்தன்
மத்தமுமதியுநாக முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தவதனால்
புத்தரொடமணைவாதி லழிவிக்குமண்ணல்
திருநீறுசெம்மைதிடமே
அத்தகுநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே. 10

தேனமர்பொழில்கொளாலை விளைசெந்நெல்துன்னி
வளர்செம்பொனெங்குநிகழ
நான்முகனாதியாய பிரமாபுரத்து
மறைஞானஞானமுனிவன்
தானுறுகோளுநாளு மடியாரைவந்து
நலியாதவண்ணமுரைசெய்
ஆனசொன்மாலையோது மடியார்கள்வானில்
அரசாள்வராணைநமதே. 11

---

பதிக வரலாறு :

*திருமறைக்காட்டில் சம்பந்தப்பெருமான் அப்பர் சுவாமிகளுடன் இருந்து மறைகளால் பூசித்து அடைக்கப்பட்டிருந்த திருக்கதவங்களைப் பாடல்களால் திறக்கவும் அடைக்கவும் செய்தருளிய பின்பு, மதுரையில் சமண் இருளை நீக்கி சைவ சமய ஒளி அளிக்கப் புறப்பட்டார். அப்போது "நாளுங் கோளும் நன்றாயில்லை" என்று சொல்லித் தானும் உடன் வருவதாகப் பரிவுடன் சொன்ன அப்பர் சுவாமிகளுக்கு மனம் அமைதியுறும் வகையில் "அடியார்களுக்கு நாளுங் கோளும் நல்லனவே" என்று எடுத்து இயம்பிய பாடல்.*

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

## மூன்றும் திருமுறை

திருக்கழுமலம் பண் : கொல்லி

மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில்நல் லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே. 1

போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே. 2

அயர்வுளோம் என்றுநீ அசைவொழி நெஞ்சமே
நியர்வளை முன்கையாள் நேரிழை யவளொடுங்
கயல்வயல் குதிகொளுங் கழுமல வளநகர்ப்
பெயர்பல துதிசெயப் பெருந்தகை யிருந்ததே. 4

மற்றொரு பற்றிலை நெஞ்சமே மறைபல
கற்றநல் வேதியர் கழுமல வளநகர்ச்
சிற்றிடைப் பேரல்குல் திருந்திழை யவளொடும்
பெற்றெனை யாளுடைப் பெருந்தகை யிருந்ததே. 6

கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தஎம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன் செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே. 11

---

## நான்காம் திருமுறை

திரு ஆரூர் பண் : சீகாமரம்

காண்டலேகருத் தாய்நினைந்திருந் தேன்மனம்புகுந்தாய் கழலடி
பூண்டுகொண் டொழிந்தேன் புறம்போயி னலறையோ
ஈண்டுமாடங்கள் நீண்டமாளிகை மேலெழுகொடி வானிளம்மதி
தீண்டி வந்துலவுந் திருவாரூ ரம்மானே. 1

பிறத்தலும்பிறந் தாற்பிணிபட வாய்ந்தசைந்துட லம்புகுந்துநின்
றிறக்குமா றுளதே இழித்தேன் பிறப்பினை நான்
அறத்தையேபுரிந்த மனத்தனாய்ஆர்வச் செற்றக்குரோத நீக்கியுன்
திறத்தனா யொழிந்தேன் திருவாரூ ரம்மானே. 8

நாடினார்கம லம்மலரய னோடிரணியன் ஆகங்கீண்டவன்
நாடிக் காணமாட்டாத் தழலாய நம்பானைப் [புக்குத்
பாடுவார்பணி வார்பல்லாண்டிசை கூறுபத்தர்கள் சித்தத்துள்
தேடிக் கண்டுகொண்டேன் திருவாரூ ரம்மானே. 10

---

ஐந்தாம் திருமுறை

திருவிடைமருதூர் திருக்குறுந்தொகை

இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்
அம்மை யேபிற வித்துயர் நீத்திடும்
எம்மை யாளும் இடைமரு தன்கழல்
செம்மை யேதொழு வார்வினை சிந்துமே. 4

கனியி னுங்கட்டி பட்டக ரும்பினும்
பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளும் அரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே. 10

மனத்துள் மாயனை மாசறு சோதியைப்
புனிற்றுப் பிள்ளைவெள் ளைம்மதி சூடியை
எனக்குத் தாயைஎம் மானிடை மருதனை
நினைத்திட் டூறிநி றைந்ததென் உள்ளமே. 2

மங்கை காணக் கொடார்மண மாலையைக்
கங்கை காணக் கொடார்முடிக் கண்ணியை
நங்கை மீரிடை மருதரிந் நங்கைக்கே
எங்கு வாங்கிக்கொ டுத்தார்இ தழியே. 6

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

ஆறும் திருமுறை

திருஇடைமருதூர் திருத்தாண்டகம்

பைந்தளிர்க் கொன்றையந் தாரார் போலும் படைக்கணாள் பாக முடையார் போலும், அந்திவாய் வண்ணத்தழகர் போலும் அணிநீல கண்ட முடையார் போலும், வந்த வரவுஞ் செலவுமாகி மாறுதென் · னுள்ளத்திருந்தார் போலும், எந்தம் இடர்தீர்க்க வல்லார் போலும் இடைமருது மேவிய ஈச னாரே. 9

பச்சை நிறமுடையர் பாலர் சாலப் பழையர் பிழையெலாம் நீக்கி யாள்வர், கச்சைக் கதநாகம் பூண்ட தோளர் கலனென்று கையேந்தி யில்லந்தோறும், பிச்சை கொளநுகர்வர் பெரியர் சாலப் பிறங்கு சடைமுடியர் பேணுந் தொண்டர், இச்சை மிக அறிவர் என்றுமுள்ளார் இடைமருது மேவி யிடங்கொண்டாரே. 7

ஏழாம் திருமுறை

திருத்தொண்டத்தொகை பண் : கொல்லி

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்,
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்,
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற்கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்.
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 1

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்றன் அடியார்க்கும் அடியேன்,
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்றன் அடியார்க்கும் அடியேன்,
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்,
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 2

மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்,
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும் அடியேன்,
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால் எறிந்த,
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 3

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்,
பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்,
ஒருநம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்,
அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 4

வம்பறா வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா,
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்,
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கற்கும் அடியேன்,
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 5

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்எறிந்த சாக்கியர்க்கும் அடியேன்,
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்,
கார்கொண்ட கொடைகழறிற் றறிவார்க்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்,
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 6

பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்,
மெய்யடியன் நரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தற் கடியேன்,
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்,
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 7

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்,
நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்,
துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்,
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவார்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 8

கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்,
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் அடியார்க்கும் அடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடி [அடியேன்
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கும்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 9

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்,
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்,
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்,
அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 10

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்,
தென்னவனய் உலகாண்ட செங்கணார்க் கடியேன்..
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்,
என்னவனும் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்,
அன்னவனும் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே. 11

---

எட்டாம் திருமுறை

திருவாசகம்

போற்றியோ நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய சயசய போற்றி போற்றி.

சங்கரா போற்றி மற்றோர் சரணிலேன் போற்றி கோலப்
பொங்கரா அல்குற் செவ்வாய் வெண்ணகைக் கரிய வாட்கண்
மங்கையோர் பங்க போற்றி மால்விடை யூர்தி போற்றி
இங்கி(வ்)வாழ் வாற்ற கில்லேன் எம்பிரான் இழித்திட்டேனே.

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

திருக்கோவையார்

குன்றங் கிடையுங் கடந்துமர் கூறும் நிதிகொணர்ந்து
மின்றங் கிடைநும் மையும்வந்து மேவுவன் அம்பலஞ்சேர்
மன்றங் கிடைமரு தேகம்பம் வாஞ்சியம் அன்னபொன்னைச்
சென்றங் கிடைகொண்டு வாடா வகைசெப்பு தேமொழியே.

---

ஒன்பதாம் திருமுறை

திருவிசைப்பா

கோயில் பண் : பஞ்சமம்

கண்பனி யரும்பக் கைகள்மொட் டித்தென்
களைகணே ஓலமென் றோலிட்(டு)
என்பெலா முருகும் அன்பர்தங் கூட்டத்
தென்னையும் புணர்ப்பவன் கோயில்
பண்பல தெளிதேன் பாடிநின் றுடப்
பனிமலர்ச் சோலைசூழ் மொழுப்பிற்
செண்பகம் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே.

---

பத்தாம் திருமுறை

திருமந்திரம்

ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்
தேடியுங் கண்டேன் சிவன்பெருந் தன்மையைக்
கூடிய வாறே குறியாக் குறிதந்தென்
ஊடுநின் றானவன் தன்னரு ளுற்றே.

---

பதினோராம் திருமுறை

மூத்தநாயனர் திருவிரட்டைமணிமாலை

திருவாக்கும் செய்கருமங் கைக்கூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் — உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலார் கூப்புவர்தங் கை.

திருச்சிற்றம்பலம்

---

௨

திருச்சிற்றம்பலம்

பன்னிரண்டாம் திருமுறை

பெரியபுராணம்

இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்,
"பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்,
மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி,
அறவா! நீ ஆடும்போதுன் அடியின்கீழ் இருக்க" என்றார்.

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

தென்னந் தமிழி னுடன்பிறந்த
சிறுகா லரும்பத் தீயரும்பும்
தேமா நிழற்கண் துஞ்சுமிளஞ்
செங்கட் கயவாய்ப் புனிற்றெருமை

இன்னம் பசும்புற் கறிக்கல்லா
இளங்கன்று துள்ளி மடித்தலநின்(று)
இழிபா லருவி யுவட்டெறிய
எறியுந் திரைத்தீம் புனற்பொய்கைப்

பொன்னங் கமலப் பசுந்தோட்டுப்
பொற்றா தாடிக் கற்றைநிலாப்
பொழியுந் தரங்கம் பொறையுயிர்த்த
பொன்போற் றெடுதோ லடிப்பொலன்சூட்(டு)

அன்னம் பொலியுந் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட அங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ.

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

## திருப்புகழ்

திமிர வுததி யனைய நரக
　　செனன மதனில் 　　　விடுவாயேல்-
செவிடு குருடு வடிவு குறைவு
　　சிறிது மிடியும் 　　　அணுகாதே;
அமரர் வடிவு மதிக குலமும்
　　அறிவு நிறையும் 　　　வரவேநின்-
அருள தருளி யெனையு மனதொ
　　டடிமை கொளவும் 　　　வரவேணும்;
சமர முகவெ லசுரர் தமது
　　தலைக ளுருள 　　　மிகவேநீள்-
சலதி யலற நெடிய பதலை
　　தகர அயிலை 　　　விடுவோனே;
வெமர வணையி லினிது துயிலும்
　　விழிகள் நளினன் 　　　மருகோனே-
மிடறு கரியர் குமர பழநி
　　விரவு மமரர் 　　　பெருமாளே.

---

## கந்தரநுபூதி

ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே.

திருச்சிற்றம்பலம்

---

மாலை II & III ஆகப் பாடல்கள் : 82

உ

திருச்சிற்றம்பலம்

மாலை IV                                                                 முதல் திருமுறை

திருநள்ளாறு                                                    பண் : பழந்தக்கராகம்

போகமார்த்த பூண்முலையா டன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவண ஆடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே. 1

தோடுடைய காதுடையன் தோலுடை யன்றலையாப்
பீடுடைய போர்விடையன் பெண்ணுமோர் பாலுடையன்
ஏடுடைய மேலுலகோ டேழ்கட லுஞ்சூழ்ந்த
நாடுடைய நம்பெருமான் மேயது நள்ளாறே. 2

தண்புனலும் வெண்பிறையுந் தாங்கிய தாழ்சடையன்
நண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தனல்ல
பண்புநள்ளா றேத்துபாடல் பத்துமி வைவல்லார்
உண்புநீங்கி வானவரோ டுலகிலு றைவாரே. 11

---

இரண்டாம் திருமுறை

திருநீற்றுப் பதிகம்

திருஆலவாய்                                                              பண் : காந்தாரம்

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே. 1

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல் வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்தி யமாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 3

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 4

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. 5

அருத்தம தாவது நீறு அவலம் அறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வானம் அளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே 6

எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் திருநீறே. 7

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவம் அறுப்பது நீறு
தராவண மாவது நீறு தத்துவமாவது நீறு
அராவணங் குந்திரு மேனிஆல வாயான் திருநீறே. 8

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலம துண்ட மிடற்றெம் ஆல வாயான் திருநீறே. 9

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்
கண்திகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்திசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆல வாயான் திருநீறே. 10

ஆற்றல் அடல்விடை யேறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. 11

---

பதிக வரலாறு :

மதுரையில் திருஞானசம்பந்தர் தங்கியிருந்த மடத்தில் சமணர்கள் வைத்த தீயானது பையவே சென்று கூன் பாண்டியனை வெப்பு நோயாகப் பற்றிக்கொள்ள அது தீருமாறு பாடியருளியதாகும்.

---

மூன்றும் திருமுறை

திருவாலவாய் பண் : புறநீர்மை

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாள்தொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே. 1

வெற்றவே அடியார் அடிமிசை வீழும்
விருப்பினன் வெள்ளைநீ றணியும்,
கொற்றவன் தனக்கு மந்திரி யாய
குலச்சிறை குலாவிநின் றேத்தும்,
ஒற்றைவெள் விடையன் உம்பரார் தலைவன்
உலகினில் இயற்கையை யொழிந்திட்
டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற
ஆலவா யாவதும் இதுவே. 2

செந்துவர் வாயாள் சேலன கண்ணாள்
சிவன்திரு நீற்றினை வளர்க்கும்
பந்தணை விரலாள் பாண்டிமா தேவி
பணிசெயப் பாரிடை நிலவும்
சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந்
தண்ணெருக் கம்மலர் வன்னி
அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ணல்
ஆலவா யாவதும் இதுவே. 3

கணங்களாய் வரினுந் தமியராய் வரினும்
அடியவர் தங்களைக் கண்டால்,
குணங்கொடு பணியுங் குலச்சிறை குலாவுங்
கோபுரஞ் சூழ்மணிக் கோயில்,
மணங்கமழ் கொன்றை வாளரா மதியம்
வன்னிவன் கூவிள மாலை,
அணங்குவீற் றிருந்த சடைமுடி யண்ணல்
ஆலவா யாவதும் இதுவே. 4

செய்யதா மரைமேல் அன்னமே யனைய
சேயிழை திருநுதற் செல்வி
பையர வல்குற் பாண்டிமா தேவி
நாள்தொறும் பணிந்தினி தேத்த
வெய்யவேற் சூலம் பாசம் அங்குசமான்
விரிகதிர் மழுவுடன் தரித்த
ஐயனார் உமையோ டின்புறுகின்ற
ஆலவா யாவதும் இதுவே. 5

நலமில ராக நலமதுண் டாக
நாடவர் நாடறி கின்ற
குலமில ராகக் குலமதுண் டாகத்
தவம்பணி குலச்சிறை பரவும்
கலைமலி கரத்தன் மூவிலை வேலன்
கரியுரி மூடிய கண்டன்
அலைமலி புனல்சேர் சடைமுடி யண்ணல்
ஆலவா யாவதும் இதுவே. 6

முத்தின்தாழ் வடமுஞ் சந்தனக் குழம்பும்
நீறுந்தன் மார்பினின் முயங்கப்,
பத்தியார் கின்ற பாண்டிமா தேவி
பாங்கொடு பணிசெய நின்ற,
சுத்தமார் பளிங்கின் பெருமலை யுடனே
சுடர்மர கதம்அடுத் தாற்போல்,
அத்தனார் உமையோ டின்புறுகின்ற
ஆலவா யாவதும் இதுவே. 7

நாவணங் கியல்பாம் அஞ்செழுத் தோதி
நல்லராய் நல்லியல் பாகும்,
கோவணம் பூதி சாதனங் கண்டால்
தொழுதெழு குலச்சிறை போற்ற,
ஏவணங் கியல்பாம் இராவணன் திண்தோள்
இருபதும் நெரிதர வூன்றி,
ஆவணங் கொண்ட சடைமுடி யண்ணல்
ஆலவா யாவதும் இதுவே. 8

மண்ணெலாம் நிகழ மன்னனாய் மன்னும்
மணிமுடிச் சோழன்றன் மகளாம்,
பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி
பாங்கினாற் பணிசெய்து பரவ,
விண்ணுளார் இருவர் கீழொடு மேலும்
அளப்பரி தாம்வகை நின்ற
அண்ணலார் உமையோ டின்புறு கின்ற
ஆலவா யாவதும் இதுவே. 9

தொண்டரா யுள்ளார் திசைதிசை தோறுந்
தொழுதுதன் குணத்தினைக் குலாவக்,
கண்டுநாள் தோறும் இன்புறு கின்ற
குலச்சிறை கருதிநின் றேத்தக்,
குண்டரா யுள்ளார் சாக்கியர் தங்கள்
குறியின்கண் நெறியிடை வாரா,
அண்டநா யகன்றான் அமர்ந்துவீற் றிருந்த
ஆலவா யாவதும் இதுவே. 10

பன்னலம் புணரும் பாண்டிமா தேவி
குலச்சிறை யெனுமிவர் பணியும்
அந்நலம் பெறுசீர் ஆலவா யீசன்
திருவடி யாங்கவை போற்றிக்
கன்னலம் பெரிய காழியுள் ஞான
சம்பந்தன் செந்தமி ழிவைகொண்
டின்னலம் பாட வல்லவர் இமையோர்
எத்தவீற் றிருப்பவர் இனிதே. 11

---

## நான்காம் திருமுறை

## திருவாதிரைத் திருப்பதிகம்

திருஆரூர் பண் : குறிஞ்சி

முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம். 1

நணியார் சேயார் நல்லார் தீயார் நாடோறும்
பிணிதான் தீரும் என்று பிறங்கிக் கிடப்பாரும்
மணியே பொன்னே மைந்தா மணாளா என்பார்கட்
கணியான் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம். 2

துன்பம் நும்மைத் தொழாத நாள்கள் என்பாரும்
இன்பம் நும்மை எத்து நாள்கள் என்பாரும்
நும்பின் எம்மை நுழையப் பணியே என்பாரும்
அன்பன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம். 9

பாரூர் பௌவத் தானைப் பத்தர் பணிந்தேத்தச்
சீரூர் பாடல் ஆடல் அறாத செம்மாப்பார்ந்
தோரூர் ஒழியா துலகம் எங்கும் எடுத்தேத்தும்
ஆரூ ரன்றன் ஆதிரை நாளால் அதுவண்ணம். 10

---

## ஐந்தாம் திருமுறை

திருஇன்னம்பர் — திருக்குறுந்தொகை

என்னி லாரும் எனக்கினி யாரில்லை
என்னி லும்இனி யானொரு வன்னுளன்
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே. 1

தொழுது தூமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே. 8

---

## ஆறாம் திருமுறை

திருப்பூவணம் — திருத்தாண்டகம்

படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்றும் பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும், நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும் நான்மறையி னொலிதோன்றும் நயனந் தோன்றும், உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்று மூரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும், புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 4

திருஆலவாய் திருத்தாண்டகம்

முளைத்தானை யெல்லார்க்கும் முன்னே தோன்றி முகிருந் சடைமுடிமேல் முகிழ்வெண் திங்கள், வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும் வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத், துளைத்தானைச் சுடுசரத்தால் துவள நீருத் தூமுத்த வெண் முறுவ லுமையோ டாடித், திளைத்தானைத் தென்கூடல் திருவா லவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 1

---

எழாம் திருமுறை

திருப்பழ மண்ணிப்படிக்கரை பண் : நட்டராகம்

முன்னவன் எங்கள்பிரான் முதல் காண்பரி தாயபிரான்,
சென்னியில் எங்கள்பிரான் திரு நீலமிடற் றெம்பிரான்,
மன்னிய எங்கள்பிரான் மறை நான்குங்கல் லால்நிழற்கீழ்ப்,
பன்னிய எங்கள்பிரான் பழ மண்ணிப் படிக்கரையே. 1

ஆடுமின் அன்புடையீர் அடிக் காட்பட்ட தூளிகொண்டு,
சூடுமின் தொண்டருள்ளீர் உம ரோடெமர் சூழவந்து,
வாடும்இவ் வாழ்க்கைதன்னை வருந் தாமல் திருந்தச்சென்று,
பாடுமின் பத்தருள்ளீர் பழ மண்ணிப் படிக்கரையே. 3

பல்லுயிர் வாழுந்தெண்ணீர்ப் பழ மண்ணிப் படிக்கரையை,
அல்லியந் தாமரைத்தார் ஆ ரூரன் உரைத்ததமிழ்,
சொல்லுதல் கேட்டல்வல்லார் அவர்க் குந்தமர்க் குங்கிளைக்கும்,
எல்லியும் நன்பகலும் இடர் கூருதல் இல்லையன்றே. 10

---

எட்டாம் திருமுறை

திருவாசகம்

ஐய நின்ன தல்ல தில்லை மற்றோர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை பொய்ம்மை யேனென் எம்பிரான்
மைக லந்த கண்ணி பங்க வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த அன்ப ரன்பெ னக்கு மாக வேண்டுமே.

வேண்டும்நின்க ழற்கணன்பு பொய்மைதீர்த்து மெய்மையே
ஆண்டு கொண்டு நாயி னேனை ஆவ வென்ற ருளுநீ
பூண்டு கொண்டடியனேனும் போற்றி போற்றியென்று
மென்றும்
மாண்டு மாண்டு வந்து வந்து மன்ன நின்வ ணங்கவே.

---

திருக்கோவையார்

பொருளா வெனைப்புகுந் தாண்டு புரந்தரன் மாலயன்பால்
இருளா யிருக்கும் ஒளிநின்ற சிற்றம் பலம்எனலாம்;
சுருளார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் துடியிடையீர்
அருளா தொழியின் ஒழியா(து) அழியும் என் ஆருயிரே!

---

ஒன்பதாம் திருமுறை

கோயில் பண் : பஞ்சமம்

சித்தனே, அருளாய்; செங்கணா, அருளாய்;
சிவபுர நகருள்வீற் றிருந்த
அத்தனே, அருளாய்; அமரனே, அருளாய்;
அமரர்கள் அதிபனே, அருளாய்;
தத்துநீர்ப் படுகர்த் தண்டலைச் சூழல்
சாட்டியக் குடியுள்ஏ ழிருக்கை
முத்தனே, அருளாய்; முதல்வனே அருளாய்;
முன்னவா, துயர்கெடுத் தெனக்கே.

---

பத்தாம் திருமுறை

விளக்கினை யேற்றி வெளியை அறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே.

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

## பதினோராம் திருமுறை

### சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை

தாமரைக் கோவும்நன் மாலும்
வணங்கத் தலைப்பிடத்துத்
தாமரைக் கோவணத் தோடிரந்
துண்ணினுஞ் சார்ந்தவர்க்குத்
தாமரைக் கோமளத் தோடுல
காளத் தருவர் கண்டீர்
தாமரைக் கோமளக் கைத்தவ
ளப்பொடிச் சங்கரரே

---

## பன்னிரண்டாம் திருமுறை — பெரிய புராணம்

### தொண்டர் இலக்கணம்

பொய்கடிந்(து) அறத்தின் வாழ்வார்
புனற்சடை முடியார்க்(கு) அன்பர்
மெய்யடி யார்கட்(கு) ஆன பணிசெயும்
விருப்பின் நின்றார்
வையகம் போற்றுஞ் செய்கை மனையறம்
புரிந்து வாழ்வார்;
சைவமெய்த் திருவின் சார்வே
பொருள்எனச் சாரு(ம்)நீரார் !

(திருநீலகண்ட நாயனார் புராணம்-2)

---

### மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

பூமரு வெடிப்பமுகை விண்டதண் டலையீன்ற
புனைநறுந் தளிர்கள்கொய்தும்
பொய்தற் பிணாக்களொடு வண்டற் கலம்பெய்து
புழுதிவிளை யாட்டயர்ந்தும்
காமரு மயிற்குஞ்சு மடவனப் பார்ப்பினொடு
புறவுபிற வும்வளர்த்தும்
காந்தள்செங் கமலத்த கழுநீர் மணந்தெனக்
கண்பொத்தி விளையாடியும்

தேமரு பசுங்கிள்ளை வைத்துமுத் தாடியும்
திரள்பொற் கழங்காடியும்
செயற்கையா னன்றியு மியற்கைச் சிவப்பூறு
சேயிதழ் விரிந்த தெய்வத்
தாமரை பழுத்தகைத் தளிரொளி துளும்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே.

---

திருப்புகழ்

சரணகம லால யத்தை அரைநிமிஷ நேர மட்டில்
தவமுறைதி யானம்வைக்க அறியாத-
சடகசட மூட மட்டி பவவினையி லேச னித்த
தமியன்மிடி யால்ம யக்க முறுவேனோ;

கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளைசெப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே-
கடகபுய மீதி ரத்ந மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார்க டப்ப மணிவோனே;

தருணமிதை யாமி குத்த கனமதுறு நீள்ச வுக்ய
சகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு-
தகைமைசிவ ஞானமுக்தி பரகதியு நீ கொடுத்து
தவிபுரிய வேணு நெய்த்த வடிவேலா;

அருணதள பாத பத்ம மதுநிதமு மேது திக்க
அரியதமிழ் தான ளித்த மயில்வீரா-
அதிசயம நேக முற்ற பழநிமலை மீது தித்த
அழகதிரு வேர கத்தின் முருகோனே.

திருச்சிற்றம்பலம்

---

ஆகப் பாடல்கள் : 45

உ

திருச்சிற்றம்பலம்

மாலை V முதல் திருமுறை

திருநீலகண்டம் பண் : வியாழக்குறிஞ்சி

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாம்அடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெ றுதிரு நீலகண்டம். 1

காவினை யிட்டுங் குளம்பல தொட்டுங் கனிமனத்தால்
ஏவினை யால்எயில் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்
தீவினை வந்தெமைத் தீண்டப்பெ றுதிரு நீலகண்டம். 2

முலைத்தடம் மூழ்கிய போகங் களும்மற் றெவையும் எல்லாம்
விலைத்தலை யாவணங் கொண்டெமை யாண்ட விரிசடையீர்
இலைத்தலைச் சூலமுந் தண்டும் மழுவும் இவையுடையீர்
சிலைத்தெமைத் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம். 3

விண்ணுல காள்கின்ற விச்சா தரர்களும் வேதியரும்
புண்ணிய ரென்றிரு போதுந் தொழப்படும் புண்ணியரே
கண்ணிமை யாதென மூன்றுடை யீருங் கழலடைந்தோம்
திண்ணிய தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம். 4

மற்றிணை யில்லா மலைதிரண் டன்னதிண் தோளுடையீர்
கிற்றெமை யாட்கொண்டு கேளா தொழிவதுந் தன்மை
கொல்லோ
சொற்றுணை வாழ்க்கை துறந்துந் திருவடி யேயடைந்தோம்
செற்றெமைத் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம். 5

மறக்கும் மனத்தினை மாற்றியெம் ஆவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் திருந்தடிக் கீழ்ப்பிழை யாதவண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமை யேத்தும் பணியடியோம்
சிறப்பிலித் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம். 6, 7

கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே
உருகி மலர்கொடு வந்துமை யேத்துதும் நாமடியோம்
செருவில் அரக்கனைச் சீரி லடர்த்தருள் செய்தவரே.
திருவிலித் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம். 8

நாற்ற மலர்மிசை நான்முகன் நாரணன் வாதுசெய்து
தோற்ற முடைய அடியும் முடியுந் தொடர்வரியீர்
தோற்றினுந் தோற்றுந் தொழுதுவணங்குதும் நாமடியோம்
சீற்றம் தாம்வினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம். 9

சாக்கியப் பட்டுஞ் சமணுரு வாகி யுடையொழிந்தும்
பாக்கிய மின்றி யிருதலைப் போகமும் பற்றும்விட்டார்
பூக்கமழ் கொன்றைப் புரிசடை யீரடி போற்றுகின்றோம்
தீக்குழித் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம் 10

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவியுண் டாகில் இமையவர் கோன்அடிக்கன்
திறம்பயில் ஞானசம் பந்தன் செந்தமிழ் பத்தும்வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பதிக வரலாறு :

ஞானசம்பந்தப் பெருமான் கொங்கு நாட்டில் திருச்செங்கோடு என வழங்கும் கொடிமாடச் செங்குன்றூரிலே தங்கியிருக்குங்கால் பனிக்காலமாதலால் சிவனடியார் யாவரும் நளிர்ச்சுரத்தினால் வருந்தினர். அந்நோய் அந்நாட்டிலே இயல்பெனினும், அடியாரைச் சேராதவாறு, முன் விடத்தையுண்டு, தேவர்கள் விடத்தின் கொடிய தீயினால் இடையுரு வண்ணம் காத்தருளிய "நீலகண்டமாகிய" மிடற்றின்மேல் ஆணையிட்டு எல்லா இடர்களுக்கும் மூலகாரணம் முன்வினையாதலால், வினை தீண்டாவாறு இப்பதிகத்தை அருளிச் செய்தார்.

உ
திருச்சிற்றம்பலம்

## இரண்டாம் திருமுறை

செல்வத்திருநாரையூர் பண் : பியந்தைக்காந்தாரம்

உரையினில் வந்தபாவம் உணர்நோய்க ளும்மசெயல் தீங்கு குற்றமுலகில், வரையினி லாமைசெய்த அவை தீரும் வண்ணம் மிகவேத்திநித்தம் நினைமின், வரைசிலை யாக அன்று மதில்மூன் றெரித்து வளர்கங்குல் நங்கை வெருவத், திரையொலி நஞ்சமுண்ட சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழவே. 1

தனம்வரும் நன்மையாகுந் தகுதிக் குழந்து வருதிக் குழன்ற வுடலின், இனம்வள ரைவர்செய்யும் வினயங்கள் செற்று நினைவொன்று சிந்தைபெருதும், முனமொரு காலம் மூன்று புரம்வெந்து மங்கச் சரமுன் றெரிந்த அவுணர், சினமொரு காலழித்த சிவன்மேயசெல்வத் திருநாரை யூர்கை தொழவே 7

எரியொரு வண்ணமாய வுருவானை யெந்தை பெருமானை யுள்கி நினையார், திரிபுர மன்றுசெற்ற சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழுவான், பொருபுனல் சூழ்ந்தகாழி மறை ஞான சம்பந்தன் உரைமாலை பத்தும் மொழிவார்,திருவளர் செம் மையாகி யருள் பேறுமிக்க துளதென்பர் செம்மையினரே. 11

## மூன்றும் திருமுறை

திருஆலவாய் திருவிராகம் பண் : கௌசிகம்

வீடலால வாயிலாய் விழுமியார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய் பரவ நின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே. 1

குற்றம்நீ குணங்கள்நீ கூடல்ஆல வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்தும்நீ யருத்தமின்ப மென்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பதென்மு கம்மனே. 3

முதிரும்நீர்ச் சடைமுடி முதல்வன்நீ முழங்கழல்
அதிரவீசி யாடுவாய் அழகன்நீ புயங்கன்நீ
மதுரன்நீ மணாளன்நீ மதுரையால வாயிலாய்
சதுரன்நீ சதுர்முகன் கபாலம்ஏந்து சம்புவே. 4

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடல்ஆல வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. 6

போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்
பாயகேள்வி ஞானசம் பந்தன்நல்ல பண்பினால்
ஆயசொல்லின் மாலைகொண் டாலவாயில் அண்ணலைத்
தீயதீர எண்ணுவார்கள் சிந்தையாவர் தேவரே. 11

---

நான்காம் திருமுறை

திருஅங்கமாலை

பொது பண் : சாதாரி

தலையே நீவணங்காய்—தலைமாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத் தலையே நீவணங்காய்.

கண்காள் காண்மின்களோ—கடல் நஞ்சுண்ட கண்டன்றன்னை
என்டோள் வீசிநின் றாடும்பிரான் றன்னைக் கண்காள்
காண்மின்களோ. 2

செவிகாள் கேண்மின்களோ—சிவன்எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப்பி ரான்திற மெப்போதுஞ் செவிகாள்
கேண்மின்களோ.

மூக்கே நீமுரலாய்—முது காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கை மணாளனை மூக்கே நீமுரலாய். 4

வாயே வாழ்த்துகண்டாய்—மதயானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்தன்னை வாயேவாழ்த்து
கண்டாய் 5

நெஞ்சே நீநினையாய்—நிமிர்புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கை மணாளனை நெஞ்சே நீநினையாய் 6

கைகாள் கூப்பித் தொழீர்—கடி மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை ஆர்த்தபரமனைக் கைகாள் கூப்பித்தொழீர்

ஆக்கை யாற்பயனென்—அரன் கோயில் வலம்வந்து [னென்
பூக்கை யால்அட்டிப் போற்றி என்னாதஇவ் ஆக்கை யாற்பய

கால்க ளாற்பயனென்—கறைக் கண்ட னுறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக் கால்க ளாற்பயனென். 9

உற்றார் ஆருளரோ—உயிர் கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக் குற்றார் ஆருளரோ. 10

இறுமாந்திருப்பன்கொலோ ஈசன்பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன் சேவடிக் கீழ்ச்சென் றங் கிறுமாந் திருப்பன்
[கொலோ

தேடிக் கண்டுகொண்டேன்—திரு மாலொடு நான்முகனுந்
தேடித்தேடொணாத்தேவனை என்னுளே தேடிக்கண்டு கொண்
[டேன்.

---

## ஐந்தாம் திருமுறை

திருக்கடவூர் மயானம் — திருக்குறுந்தொகை

குழைகொள் காதினர் கோவண ஆடையர்
உழையர் தாங்கட வூரின் மயானத்தார்
பழைய தம்மடி யார்செய்த பாவமும்
பிழையுந் தீர்ப்பர் பெருமா னடிகளே. 1

உன்னி வானவர் ஓதிய சிந்தையில்
கன்னல் தேன்கட வூரின் மயானத்தார்
தன்னை நோக்கித் தொழுதெழு வார்க்கெலாம்
பின்னை என்னார் பெருமா னடிகளே 2

---

## ஆறாம் திருமுறை

திருஆலவாய் — திருத்தாண்டகம்

வானமிது வெல்லா முடையான் தன்னை வரியரவக் கச்சானை வன்பேய் சூழக், கானமதில் நடமாட வல்லான் தன்னைக் கடைக்கண்ணால் மங்கையுமை நோக்கா வென்மேல், ஊன மதுவெல்லா மொழித்தான் தன்னை யுணர்வாகியடியேன துள்ளே நின்ற, தேனமுதைத் தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே 4

வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத் தூயானைத், தூவெள்ளை யேற்றான் தன்னைச் சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென், தாயானைத் தவமாய தன்மை யானைத் தலையாய தேவாதி தேவர்க்கென்றும், சேயானைத் தென்கூடல் திருவால வாய்ச் சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. 8

---

## ஏழாம் திருமுறை

திருக்கழிப்பாலை — பண் நட்டராகம்

செடியேன் தீவினையில் தடுமாறக் கண்டாலும்
அடியான் ஆவவனு தொழிதல் தகவாமே
முடிமேல் மாமதியும் அரவும் உடன்துயிலும்
வடிவே தாம்உடையார் மகிழுங்கழிப் பாலையதே 1

எங்கே னும்இருந்துன் அடியேன் உனைநினைந்தால்
அங்கே வந்தென்னொடும் உடனாகி நின்றருளி
இங்கே என்வினையை அறுத்திட் டெனையாளும்
கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே. 2

சுரும்பார் விண்டமலர் அவைதூவித் தூங்குகண்ணீர்
அரும்பா நிற்குமனத் தடியாரொடும் அன்புசெய்வன்
விரும்பேன் உன்னையல்லால் ஒருதெய்வம் என்மனத்தால்
கரும்பா ருங்கழனிக் கழிப்பாலை மேயானே. 4

பொய்யா நாவதனால் புகழ்வார்கள் மனத்தினுள்ளே
மெய்யே நின்றெரியும் விளக்கேஒத்த தேவர்பிரான்
செய்யா னுங்கரிய நிறத்தானும் தெரிவரியான்
மையார் கண்ணியொடு மகிழ்வான்கழிப் பாலையதே. 9

பழிசே ரில்புகழான் பரமன் பரமேட்டி
கழியார் செல்வமல்குங் கழிப்பாலை மேயானைத்
தொழுவான் நாவலர்கோன் ஆரூரன் உரைத்ததமிழ்
வழுவா மாலைவல்லார் வானோர்உல காள்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

எட்டாம் திருமுறை

கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின் தோல்
உடையவ னேமன்னும் உத்தர கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிக்கொள்

வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியு மாய்இருள் ஆயினார்க்குத்
துன்பமு மாய்இன்பம் ஆயினார்க்குப்
பாதியு மாய்முற்றும் ஆயினார்க்குப்
பந்தமு மாய்வீடும் ஆயினாருக்(கு)
ஆதியும் அந்தமும் ஆயினாருக்(கு)
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

திருக்கோவையார்

ஆனந்த வெள்ளத் தழுந்துமொர் ஆருயிர் ஈருருக்கொண்(டு)
ஆனந்த வெள்ளத் திடைத்திளைத் தாலொக்கும் அம்பலஞ்சேர்
ஆனந்த வெள்ளத் தறைகழ லோனருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம்வற் றாதுமுற் றாதிவ் வணிநலமே!

ஒன்பதாம் திருமுறை

செங்கணா போற்றி! திசைமுகா போற்றி!
சிவபுர நகருள்வீற் றிருந்த
அங்கணா போற்றி! அமரனே போற்றி!
அமரர்கள் தலைவனே போற்றி!
தங்கள்நான் மறைநூல் சகலமுங் கற்றோர்
சாட்டியக் குடியிருந் தருளும்
எங்கள்நா யகனே போற்றி! ஏழிருக்கை
இறைவனே போற்றியே போற்றி!

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

## பத்தாம் திருமுறை

மறப்புற்று இவ்வழி மன்னிநின் ருலுஞ்
சிறப்பொடு பூநீர் திருந்தமுன் ஏந்தி
மறப்பின்றி யுன்னை வழிபடும் வண்ணம்
அறப்பெற வேண்டும் அமரர் பிரானே!

## பதினோராம் திருமுறை

திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

பொருளுங் குலனும் புகழுந் திறனும்
அருளும் அறிவும் அனைத்தும்—ஒருவர்
கருதாளன் பார்க்குங் கறைமிடற்றாய் தொல்லை
மருதாளன் பார்க்கு வரும்.

## பன்னிரண்டாம் திருமுறை — பெரிய புராணம்

அடியனேன் அறிவிலாமை கண்டும்என் அடிமை வேண்டிப்
படிமிசைக் கமரில் வந்திங்(கு) அமுதுசெய் பரனே போற்றி!
துடியிடை பாக மான தூயநற் சோதி போற்றி!
பொடியணி பவளமேனி புரிசடைப் புராண போற்றி!

(அரிவாட்டாய நாயனர் புராணம்-20)

## மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

காலத் தொடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடற்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுண் மணியே! உயிரால
வாலத் துணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க் கொளிபூத் தளிபழுத்த
மலர்க்கற் பகமே! எழுதாச் சொல்
மழலை ததும்பு பசுங்குதலைச்

சோலைக் கிளியே உயிர்த்துணையாம்
தோன்றாத் துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியில்
துரியங் கடந்த பரநாத

மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே! முத்தந் தருகவே!
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தந் தருகவே.

---

திருப்புகழ்

வரிக்கலையி னிகரான விழிக்கடையி வினோரை
மயக்கியிடு மடவார்கள் மயலாலே-
மதிக்குளறி யுளகாசு மவர்க்குதவி மிடியாகி
வயிற்றிலெரி மிகமூள அதனாலே;
ஒருத்தருட னுறவாகி ஒருத்தரொடு பகையாகி
ஒருத்தர்தமை மிகநாடி அவரோடே-
உணக்கையிடு படுபாவி எனக்குனது கழல்பாட
உயர்ச்சிபெறு குணசீல மருள்வாயே;
விரித்தருண கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்தபல முடனோத மகிழ்வோனே-
வெடித்தமணர் கழுவேற ஒருத்திகண வனுமீள
விளைத்ததொரு தமிழ்பாடு புலவோனே;
செருக்கியிடு பொருசூரர் குலத்தையடி யறமோது
திருக்கையினில் வடிவேலை யுடையோனே-
திருக்குலவு மொருநீல மலர்ச்சுனையி லழகான
திருத்தணிகை மலைமேவு பெருமானே.

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

மாலை VI

முதல் திருமுறை

திருநெடுங்களம்

பண்: பழந்தக்கராகம்

மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப்பே சினல்லால்
குறையுடையார் குற்றமோராய் கொள்கையினு லுயர்ந்த
நிறையுடையா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 1

கனைத்தெழுந்த வெண்டிரைசூழ் கடலிடைநஞ் சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில் வைத்த திருந்தியதே வநின்னை
மனத்தகத்தோர் பாடலாடல் பேணியிராப் பகலும்
நினைத்தெழுவா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே 2

நின்னடியே வழிபடுவா னிமலாநினைக் கருத
என்னடியா னுயிரைவவ்வே லென்றடற்கூற் றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடுநீர் சுமக்கும்
நின்னடியா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 3

மலைபுரிந்த மன்னவன்றன் மகளையோர்பான் மகிழ்ந்தாய்
அலைபுரிந்த கங்கைதங்கு மவிர்சடையா ரூரா
தலைபுரிந்த பலிமகிழ்வாய் தலைவநின்ரு ணிழற்கீழ்
நிலைபுரிந்தா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 4

பாங்கினல்லார் படிமஞ்செய்வார் பாரிடமும் பலிசேர்
தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழலே வணங்கித்
தாங்கிநில்லா வன்பினேடுந் தலைவநின்ரு ணிழற்கீழ்
நீங்கிநில்லா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 5

விருத்தனுகிப் பாலனுகி வேதமோர்நான் குணர்ந்து
கருத்தனுகிக் கங்கையாளைக் கமழ்சடைமேற் கரந்தாய்
அருத்தனுய வாதிதேவ னடியிணையே பரவும்
திருத்தர்கீத ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 6

கூறுகொண்டாய் மூன்றுமொன்றுக் கூட்டியோர்வெங் .
கணையால்
மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே கொடிமேல்
ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமா னணிந்த
நீறுகொண்டா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 7

குன்றினுச்சி மேல்விளங்குங் கொடிமதில்சூ ழிலங்கை
அன்றிநின்ற வரக்கர்கோனை யருவரைக்கீ ழடர்த்தாய்
என்றுநல்ல வாய்மொழியா லேத்தியிராப் பகலும்
நின்றுநைவா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 8

வேழவெண்கொம் பொசித்தமாலும் விளங்கியநான் முகனுஞ்
சூழவெங்கு நேடவாங்கோர் சோதியுளா கிநின்றாய்
கேழல்வெண்கொம் பணிந்தபெம்மான் கேடிலாப்பொன்னடியின்
நீழல்வாழ்வா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 9

வெஞ்சொற்றஞ்சொல் லாக்கிநின்ற வேடமிலாச் சமணும்
தஞ்சமில்லாச் சாக்கியருந் தத்துவமொன் றறியார்
துஞ்சலில்லா வாய்மொழியாற் றோத்திரநின் னடியே
நெஞ்சில்வைப்பா ரிடர்களையாய் நெடுங்களமே யவனே. 10

நீடவல்ல வார்சடையான் மேயநெடுங் களத்தைச்
சேடர்வாழு மாமறுகிற் சிரபுரக்கோ னலத்தால்
நாடவல்ல பனுவன்மாலை ஞானசம்பந்தன் சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம்ப றையுமே. 11

---

பதிக வரலாறு:

*சிவபெருமான்பால் நேசம் செல்லாவகை தடுக்கும் இடர்கள் நீங்கப் பாடியருளியது.*

---

இரண்டாம் திருமுறை

திருப்பாசூர் பண் : காந்தாரம்

சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துள்ளார்
மைந்தர் மணாள ரென்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த பாசூரே. 1

பேரும் பொழுதும் பெயரும் பொழுதும் பெம்மானென்(று)
ஆருந் தனையும் அடியா ரேத்த அருள் செய்வார்
ஊரும் அரவம் உடையார் வாழும் ஊர்போலும்
பாரின் மிசையார் பாட லோவாப் பாசூரே. 2

கையால் தொழுது தலைசாய்த் துள்ளங் கசிவார்கள்
மெய்யார் குறையுந் துயருந் தீர்க்கும் விமலனார்
நெய்யா டுதலஞ் சுடையார் நிலாவும் ஊர்போலும்
பைவாய் நாகங் கோட லீனும் பாசூரே. 3

பொங்கா டரவும் புனலுஞ் சடைமேற் பொலிவெய்தக்
கொங்கார் கொன்றை சூடியென் னுள்ளங் குளிர்வித்தார்
தங்கா தலியுந் தாமும் வாழும் ஊர்போலும்
பைங்கான் முல்லை பல்லரும் பீனும் பாசூரே. 4

ஞானம் உணர்வான் காழி ஞான சம்பந்தன்
தேனும் வண்டும் இன்னிசை பாடுந் திருப்பாசூர்க்
கானம் முறைவார் கழல்சேர் பாடல் இவைவல்லார்
ஊனம் இலராய் உம்பர் வானத் துறைவாரே. 11

---

மூன்றும் திருமுறை

நமச்சிவாயத் திருப்பதிகம்

பொது பண் : கௌசிகம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது 1
நாதன் நாமம் நமச்சி வாயவே.

நம்பு வாரவர் நாவி னவிற்றினால்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்
நம்பன் நாமம் நமச்சி வாயவே. 2

நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினைந்
தக்கு மாலைகொ டங்கையில் எண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்கன் நாமம் நமச்சி வாயவே. 3

இயமன் தூதரும் அஞ்சுவர் இன்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினல்
நியமந் தான்நினை வார்க்கினி யான்நெற்றி
நயனன் நாமம் நமச்சி வாயவே 4

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனும் இயம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையும் நீங்குவ ரென்பரால்
நல்லார் நாமம் நமச்சி வாயவே. 5

மந்த ரம்அன்ன பாவங்கள் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால்
நந்தி நாமம் நமச்சி வாயவே. 6

நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயினர் ஆயின் உருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரதன் நாமம் நமச்சி வாயவே. 7

இலங்கை மன்னன் எடுத்த அடுக்கல்மேல்
தலங்கொள் கால்விரல் சங்கரன் ஊன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவன் உய்வகை
நலங்கொள் நாமம் நமச்சி வாயவே. 8

போதன் போதன கண்ணனும் அண்ணல்தன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி அலந்தவர்
ஓதும் நாமம் நமச்சி வாயவே 9

கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்
வெஞ்சொல் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை யண்டர்கள் வேண்ட அமுதுசெய்
நஞ்சுண் கண்டன் நமச்சி வாயவே. 10

நந்தி நாமம் நமச்சிவா யவெனும்
சந்தை யால்தமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யால்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாசம் அறுக்கவல் லார்களே. 11

---

நான்காம் திருமுறை

பொது பண் : காந்தாரபஞ்சமம்

நமச்சிவாயத் திருப்பதிகம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. 1

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரன்அஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே. 2

விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. 3

இடுக்கண்பட் டிருக்கினும் இரந்து யாரையும்
விடுக்கிற் பிரானென்று வினவுவோ மல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளின் நாம்உற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே. 4

வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கலம் அருமறை ஆறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கலம் நமச்சி வாயவே. 5

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்கு வான்நலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. 6

வீடினார் உலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினார் அந்நெறி கூடிச் சென்றலும்
ஓடினேன் ஓடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சி வாயவே. 7

இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே. 8

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாதல் திண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே. 9

மாப்பிணை தழுவிய மாதோர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே. 10

---

## ஐந்தாம் திருமுறை

பொது — தனித்திருக்குறுந்தொகை

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்

மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே. 1

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. 2

குறி களும்அடை யாளமுங் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே. 6

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே. 7

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே. 10

---

ஆறாந் திருமுறை

திருநள்ளாறு: திருத்தாண்டகம்

குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான் தன்னைக் குலவரையின் மடப்பாவை யிடப்பா லானை, மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட மறையவனைப் பிறைதவழ் செஞ் சடையி னானைச், சலங்கெடுத்துத் தயாமூல தன்மமென்னுந் தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம், நலங் கொடுக்கும் நம்பியை நள்ளாற்றானை நானடியேன் நினைக்கப் பெற் றுய்ந்த வாறே. 6

திருமறைக்காடு திருத்தாண்டகம்

தூண்டு சுடரனைய சோதி கண்டாய் தொல்லமரர்சூளா மணிதான் கண்டாய், காண்டற் கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க் காற்ற எளியான் கண்டாய், வேண்டுவார் வேண்டு வதே ஈவான் கண்டாய் மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லாம், மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய் மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 1

---

ஏழாம் திருமுறை

திருப்பாண்டிக்கொடுமுடி பண் : பழம்பஞ்சுரம்

அஞ்செழுத்துண்மை

மற்றுப் பற்றெனக் கின்றி நின் திருப்பாத மேமனம் பாவித்தேன்,
பெற்ற லும்பிறந்தேன் இனிப்பிற வாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்தும் சீர்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி,
நற்ற வாஉனை நான்ம றக்கினும் சொல்லும் நா நமச்சி வாயவே.

இட்ட னும்மடி ஏத்து வார்இகழ்ந் திட்டநாள்மறந் திட்டநாள்,
கெட்ட நாள்இவை என்ற லாற்கரு தேன்கி ளர்புனற் காவிரி,
வட்ட வாசிகை கொண்ட டிதொழு தேத்து பாண்டிக் கொடுமுடி,
நட்ட வாஉனை நான்ம றக்கினும் சொல்லும் நா நமச்சி வாயவே.

ஓவு நாள்உணர் வழியும் நாள்உயிர் போகும் நாள்உயர் பாடைமேல்,
காவும் நாள்இவை என்ற லாற்கரு தேன்கி ளர்புனற் காவிரிப்,
பாவு தண்புனல் வந்தி ழிபரஞ் சோதி பாண்டிக் கொடுமுடி,
நாவ லாஉனை நான்ம றக்கினும் சொல்லும் நா நமச்சி வாயவே.

எல்லை யில்புகழ் எம்பிரான் எந்தை தம்பிரான் என்பொன் மாமணி,
கல்லை உந்தி வளம்பொ ழிந்திழி காவி ரியதன் வாய்க்கரை,
நல்ல வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி,
வல்ல வாஉனை நான்ம றக்கினும் சொல்லும் நா நமச்சி வாயவே.

அஞ்சி னார்கரண் ஆதிஎன் றடி யேனும் நான்மிக அஞ்சினேன்,
அஞ்சல் என்றடித் தொண்ட னேற்கருள் நல்கி னாய்க்கழி கின்றதென்,
பஞ்சின் மெல்லடிப் பாவை மார்குடைந் தாடு பாண்டிக் கொடுமுடி,
நஞ்ச ணிகண்ட நான்ம றக்கினும் சொல்லும் நா நமச்சி வாயவே.

ஏடு வான் இளந் திங்கள் சூடினை என்பின் கொல் புலித்தோலின்
ஆடு பாம்பத ரைக்க சைத்த அழகனே அந்தண் காவிரிப் [மேல்,
பாடு தண்புனல் வந்தி ழிபரஞ் சோதி பாண்டிக் கொடுமுடிச்,
சேட னேஉனை நான்ம றக்கினும் சொல்லும் நா நமச்சி வாயவே.

விரும்பி நின்மலர்ப் பாத மேநினைந் தேன்வி னைகளும் விண்டனன,
நெருங்கி வண்பொழில் சூழ்ந்தெ ழில்பெற நின்ற காவிரிக் கோட்டிடைக்
குரும்பை மென்முலைக் கோதை மார்குடைந்தாடு பாண்டிக் கொடுமுடி
விரும்ப னேஉனை நான்ம றக்கினும் சொல்லும் நாநமச்சி வாயவே. 7

செம்பொ னேர்சடை யாய்தி ரிபுரம் தீயெ ழச்சிலை கோலினய்,
வம்பு லாங்குழ லாளைப்பாகம் அமர்ந்து காவிரிக் கோட்டிடைக்,
கொம்பின் மேற்குயில் கூவ மாமயில் ஆடு பாண்டிக் கொடுமுடி,
நம்ப னேஉனை நான்ம றக்கினும் சொல்லும் நா நமச்சி வாயவே.

சாரணன் தந்தை எம்பி ரான்எந்தை தம்பிரான் என்பொன், மாமணியென்று,
பேரெ ணாயிர கோடி தேவர் பிதற்றி நின்று பிரிகிலார்,
நார ணன்பிர மன்தொழுங்கறை யூரிற் பாணடிக் கொடுமுடிக்,
கார ணாஉனை நான்ம றக்கினும் சொல்லும் நா நமச்சி வாயவே.

கோணி யபிறை சூடி யைக்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி,
பேணி யபெரு மானைப் பிஞ்ஞகப் பித்தனைப்பிறப் பில்லியைப்
பாணு லாவரி வண்ட றைகொன்றைத் தார னைப்படப் பாம்பரை,
நாண னைத்தொண்டன் ஊரன் சொல்இவை சொல்லு வார்க்கில்லைத் துன்பமே.

---

எட்டாம் திருமுறை

உடையாள் உன் தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி,
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தானல் அடியேன் உன்,
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய் பொன்னம் பலத்தெம்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே.

நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்
தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே.

---

திருக்கோவையார்

புரங்கடந் தானடி காண்பான்
புவிவிண்டு புக்கறியா(து)
இரங்கிடெந் தாயென் றிரப்பத்தன்
னீரடிக் கென்னிரண்டு
கரங்கள்தந் தானொன்று காட்டமற்
றாங்கதுங் காட்டிடென்று
வரங்கிடந் தான்தில்லை யம்பல
முன்றிலம் மாயவனே.

---

ஒன்பதாம் திருமுறை

கோயில் பண் : சாளரபாணி

கடியார் கணம்புல்லர் கண்ணப்பர் என்றுன்
அடியார் அமருலகம் ஆளநீ ஆளாதே
முடியார்முத் தீவேள்வி மூவாயி ரவரொடுங்
குடிவாழ்க்கை கொண்டுநீ குலாவிக்கூத் தாடினையே.

---

பத்தாம் திருமுறை

நாடு நகரமும் நற்றிருக் கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெரு மான்என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே.

திருச்சிற்றம்பலம்

---

௳

திருச்சிற்றம்பலம்

பதினோராம் திருமுறை

திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

வளையார் பசியின் வருந்தார் பிணியின் மதனன் அம்புக்
கிளையார் தனங்கண் டிரங்கிநில் லார்இப் பிறப்பினில்வந்
தளையார் நரகினுக் கென்கட வார்பொன் அலர்ந்தகொன்றைத்
தளையார் இடைமரு தன்னடி யாரடி சார்ந்தவரே.

---

பன்னிரண்டாம் திருமுறை — பெரிய புராணம்

வேத வுள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையும் அவரடி யாரையும் நயந்து
பாத அர்ச்சனை புரிவதும் பணிவது மென்றே
காத லாலவை இரண்டுமே செய்கருத் துடையன்.

---

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

பெருந்தே னிறைக்கு நறைக்கூந்தற்
பிடியே வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறைமௌலிப்
பெம்மான் முக்கட் சுடர்க்கிடுநல்

விருந்தே வருக மும்முதற்கும்
வித்தே வருக வித்தின்றி
விளைந்த பரமா னந்தத்தின்
விளைவே வருக பழமறையின்

குருந்தே வருக அருள்பழுத்த
கொம்பே வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளம்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்

மருந்தே வருக பசுங்குதலை
மழலைக் கிளியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

---

திருப்புகழ்

அகரமு மாகி யதிபனு மாகி யதிகமு மாகி
அகமாகி -
அயனென வாகி அரியென வாகி அரனென வாகி
அவர்மேலாய்;
இகரமு மாகி யெவைகளு மாகி யினிமையு மாகி
வருவோனே -
இருநில மீதி லெளியனும் வாழ எனதுமு னோடி
வரவேணும்;
மகபதி யாகி மருவும்வ லாரி மகிழ்களி கூரும்
வடிவோனே -
வனமுறை வேட னருளிய பூஜை மகிழ்கதிர் காம
முடையோனே -
செககண சேகு தகுதிமி தோதி திமியென ஆடு
மயிலோனே -
திருமலி வான பழமுதிர் சோலை மலைமிசை மேவு
பெருமாளே.

திருச்சிற்றம்பலம்

---

ஆகப் பாடல்கள் : 63

௳

திருச்சிற்றம்பலம்

மாலை VII முதல் திருமுறை

கோயில் பண் : குறிஞ்சி

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே. 1

நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப்
பிறைவந் திறைதாக்கும் பேரம் பலந்தில்லைச்
சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய
இறைவன் கழலேத்து மின்ப மின்பமே. 4

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே. 5

கூர்வா ளரக்கன்றன் வலியைக் குறைவித்துச்
சீரா லேமல்கு சிற்றம் பலமேய
நீரார் சடையானை நித்த லேத்துவார்
தீரா நோயெல்லாந் தீர்தல் திண்ணமே. 8

ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்
சீலத் தார்கொள்கைச் சிற்றம் பலமேய
சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத் தாற்பாட வல்லார் நல்லாரே. 11

---

திருஆலவாய் பண் : குறிஞ்சி

நீல மாமிடற், றால வாயிலான்
பால தாயினார், ஞாலம் ஆள்வரே. 1

ஞாலம் ஏழுமாம், ஆல வாயிலார்
சீல மேசொலீர், காலன் வீடவே. 2

ஆல நீழலார், ஆல வாயிலார்
கால காலனார், பால தாமினே. 3

அந்த மில்புகழ், எந்தை யாலவாய்
பந்தி யார்கழல், சிந்தை செய்ம்மினே. 4

ஆட லேற்றினன், கூட லாலவாய்
பாடி யேமனம், நாடி வாழ்மினே. 5

அண்ணல் ஆலவாய், நண்ணி னான்தனை
எண்ணி யேதொழத், திண்ணம் இன்பமே. 6

அம்பொன் ஆலவாய், நம்ப னார்கழல்
நம்பி வாழ்பவர், துன்பம் வீடுமே. 7

அரக்க னார்வலி, நெருக்கன் ஆலவாய்
உரைக்கு முள்ளத்தார்க், கிரக்கம் உண்மையே. 8

அருவன் ஆலவாய், மருவி னான்தனை
இருவ ரேத்தநின், றுருவம் ஓங்குமே. 9

ஆரம் நாகமாம், சீரன் ஆலவாய்த்
தேர மண்செற்ற, வீர னென்பரே. 10

அடிகள் ஆலவாய்ப், படிகொள் சம்பந்தன்
முடிவி லின்தமிழ் செடிகள் நீக்குமே. 11

---

## இரண்டாம் திருமுறை

திருக்கடவூர்மயானம் பண் : காந்தாரம்

வரியமறையார் பிறையார் மலையோர்சிலையா வணக்கி
எரியமதில்கள் எய்தார் எறியும்முசலம் உடையார்
கரியமிடறும் உடையார் கடவூர்மயானம் அமர்ந்தார்
பெரியவிடைமேல் வருவா ரவரெம்பெருமான் அடிகளே. 1

பாசமான களைவார் பரிவார்க்கமுதம் அனையார்
ஆசைதீரக் கொடுப்பார் அலங்கல்விடைமேல் வருவார்
காசைமலர்போல் மிடற்றார் கடவூர்மயானம் அமர்ந்தார்
பேசவருவார் ஒருவர் அவரெம்பெருமான் அடிகளே. 7

மரவம்பொழில்சூழ் கடவூர் மன்னும்மயானம் அமர்ந்த
அரவம்அசைத்த பெருமான் அகலம்அறிய லாகப்
பரவும்முறையே பயிலும் பந்தன்செஞ்சொல் மாலை
இரவும்பகலும் பரவி நினைவார்வினைகள் இலரே. 11

---

## மூன்றும் திருமுறை

பொது பண் : கௌசிகம்

### திருப்பாசுரம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. 1

அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரியர் ஏறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே. 2

வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாஎழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவர் எவ்வகை யார்கொலோ. 3

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில்அள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார். 4

ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி
மாதுக்கம் நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே. 5

ஆடும் எனவும் அருங்கூற்றம் உதைத்து வேதம்
பாடும் எனவும் புகழல்லது பாவம் நீங்கக்
கேடும் பிறப்பும் அறுக்கும் மெனக்கேட் டீராகில்
நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்ட லாமே. 9

கடிசேர்ந்த போது மலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை பண்டு
முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ணம் அறிவார் சொலக் கேட்டுமன்றே. 7

வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமை யுலகத்தவர் ஏத்தல் செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூதன் ஒலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே. 8

பாராழி வட்டம் பகையால் நலிந்தாட்ட ஆடிப்
பேராழி யானதிடர் கண்டருள் செய்தல்பேணி
நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்டவர்க்குப்
போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே. 9

மாலா யவனும் மறைவல்ல நான்முகனும்
பாலாய தேவர்பக ரில்லமு தூட்டல் பேணிக்
காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த
ஆலாலம் உண்டங்கம ரர்க்கருள் செய்த தாமே. 10

அற்றன்றி யந்தண் மதுரைத் தொகை யாக்கினும்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்
பற்றின்றிப் பாங்கெதிர் வினூரவும் பண்புநோக்கில்
பெற்றேன் றுயர்த்த பெருமான் பெருமானுமன்றே. 11

நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்தன் நல்ல
எல்லார் களும்பரவும் ஈசனை யேத்து பாடல்
பல்லார் களும்மதிக்கப் பாசுரஞ் சொன்ன பத்தும்
வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே. 12

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

## நான்காம் திருமுறை

திருஆலவாய் திருநேரிசை

வேதியா வேதகீதா விண்ணவ ரண்ணு என்றென்
ருேதியே மலர்கள் தூவி ஒருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 1

நம்பனே நான்மு கத்தாய் நாதனே ஞான மூர்த்தீ
என்பொனே ஈசா என்றென் றேத்திநான் ஏசற் றென்றும்
பின்பினே திரிந்து நாயேன் பேர்த்தினிப் பிறவா வண்ணம்
அன்பனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 2

ஒருமருந் தாகி யுள்ளாய் உம்பரோ டுலகுக்கெல்லாம்
பெருமருந் தாகி நின்ருய் பேரமு தின்சு வையாய்க்
கருமருந் தாகி யுள்ளாய் ஆளும்வல் வினைகள் தீர்க்கும்
அருமருந் தால வாயில் அப்பனே அருள்செ யாயே. 3

செய்யநின் கமல பாதஞ் சேருமா தேவர் தேவே
மையணி கண்டத் தானே மான்மறி மழுவொன் றேந்துஞ்
சைவனே சால ஞானங் கற்றறி விலாத நாயேன்
ஐயனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 4

வெண்தலை கையில் ஏந்தி மிகவுமூர் பலிகொண் டென்றும்
உண்டது மில்லை சொல்லில் உண்டது நஞ்சு தன்னைப்
பண்டுனை நினைய மாட்டாப் பளகனேன் உளம தார
அண்டனே ஆலவாயில் அப்பனே அருள்செ யாயே 5

எஞ்சலில் புகலி தென்றென் றேத்திநான் ஏசற் றென்றும்
வஞ்சக மொன்று மின்றி மலரடி காணும் வண்ணம்
நஞ்சினை மிடற்றில் வைத்த நற்பொருட் பதமே நாயேற்
கஞ்சலென் ருலவாயில் அப்பனே அருள்செ யாயே. 6

வழுவிலா துன்னை வாழ்த்தி வழிபடுந் தொண்ட னேன்உன்
செழுமலர்ப் பாதங்காணத் தெண்டிரை நஞ்ச முண்ட
குழகனே கோல வில்லீ கூத்தனே மாத்தா யுள்ள
அழகனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 7

நறுமலர் நீருங் கொண்டு நாள்தொறும் ஏத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத் திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன் பாகா மாமறை யங்க மாறும்
அறிவனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 8

நலந்திகழ் வாயின் நூலாற் சருகிலைப் பந்தர் செய்த
சிலந்தியை அரச தாள அருளினாய் என்று திண்ணங்
கலந்துடன் வந்து நின்தாள் கருதிநான் காண்ப தாக
அலந்தனன் ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 9

பொடிக்கொடு பூசிப் பொல்லாக் குரம்பையிற் புந்தி யொன்றிப்
பிடித்துநின் தாள்களென்றும் பிதற்றிநா னிருக்க மாட்டேன்
எடுப்பனென் றிலங்கைக்கோன்வந் தெடுத்தலுமிருப துதோள்
அடர்த்தனே ஆல வாயில் அப்பனே அருள்செ யாயே. 10

---

ஐந்தாம் திருமுறை

திருப்பூவனூர் — திருக்குறுந்தொகை

பூவ னூர்ப்புனி தன்திரு நாமந்தான்
நாவில் நூறுநா றுயிர நண்ணினார்
பாவ மாயின பாறிப் பறையவே
தேவர் கோவினுஞ் செல்வர்க ளாவரே. 1

அனுச யப்பட் டதுஇது என்னாதே
கனிம னத்தொடு கண்களும் நீர்மல்கிப்
புனித னைப்பூவ னூரனைப் போற்றுவார்
மனித ரில்தலை யான மனிதரே. 6

திருமாற்பேறு : திருக்குறுந்தொகை

ஏதும் ஒன்றும் அறிவில ராயினும்
ஓதி அஞ்செலுத் தும்முணர் வார்கட்குப்
பேத மின்றி அவரவர் உள்ளத்தே
மாதுந் தாமும் மகிழ்வர்மாற் பேறரே. 1

சாத்தி ரம்பல பேசுஞ் சழக்ர்காள்
கோத்தி ரமுங்கு லமுங்கொண் டென்செய்வீர்
பாத்தி ரஞ்சிவ மென்று பணிதிரேல்
மாத்தி ரைக்குள் அருளுமாற் பேறரே. 3

ஐய னேஅர னேயென் றரற்றினல்
உய்ய லாம்உல கத்தவர் பேணுவர்
செய்ய பாதம் இரண்டும் நினையவே
வையம் ஆளவும் வைப்பர்மாற் பேறரே. 7

---

ஆரும் திருமுறை

மறுமாற்றத் திருத்தாண்டகம்

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம். ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரன் நற் சங்க வெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே. 1

நாவார நம்பனையே பாடப் பெற்றோம் நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம், ஆவாளன் றெமையாள்வான் அமரர் நாதன் அயனெடுமாற் கறிவரிய அனலாய் நீண்ட, தேவாதி தேவன் சிவனென் சிந்தை சேர்ந்திருந்தான் தென்திசைக்கோன் தானே வந்து, கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலுங் குணமாகக் கொள்ளோமெண் குணத்துளோமே.

பொது விஞவிடைத் திருத்தாண்டகம்

பட்டமுந் தோடுமோர் பாகங் கண்டேன் பார்திகழப் பலிதிரிந்து போதக் கண்டேன், கொட்டிநின் றிலயங்களாடக் கண்டேன் குழைகாதிற் பிறைசென்னி யிலங்கக் கண்டேன், கட்டங்கக் கொடிதிண்டோள் ஆடக் கண்டேன், கனமழுவாள் வலங்கையில் இலங்கக் கண்டேன், சிட்டனைத் திருவால வாயிற் கண்டேன் தேவனைக் கனவில் நான் கண்டவாறே.

---

ஏழாம் திருமுறை

திருவாரூர் பண் : தக்கேசி

பொன்னும் மெய்ப்பொரு ளும்தரு வானைப்
போக முந்திரு வும்புணர்ப் பானைப்,
பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை,
இன்ன தன்மையன் என்றறி வொண்ணா
எம்மா னைஎளி வந்தபி ரானை,
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
ஆரு ரானை மறக்கலு மாமே. 1

வாளா நின்று தொழும்அடி யார்கள்
வான்ஆ ளப்பெறும் வார்த்தையைக் கேட்டும்,
நாளு நாளும்மலர் இட்டுவ ணங்கார்
நம்மைஆள் கின்ற தன்மையை ஓரார்,
கேளா நான்கிடந் தேஉழைக் கின்றேன்
கிளைக்கெ லாந்துணை யாம் எனக்கருதி,
ஆளா வான்பலர் முன்பழைக் கின்றேன்
ஆரு ரானை மறக்கலு மாமே. 8

ஓரூர் என்றுல கங்களுக் கெல்லாம்
உரைக்கலாம் பொரு ளாய்உடன் கூடிக்,
காரூ ருங்கமழ் கொன்றைநன் மாலை
முடியன் காரிகை காரண மாக,
ஆரூ ரைமறத் தற்கரி யானை
அம்மான் றன்திருப் பேர்கொண்ட தொண்டன்,
ஆரூ ரன்அடி நாய்உரை வல்லார்
அமர லோகத் திருப்பவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

திருவாரூர் பண் : செந்துருத்தி

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே,
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி,
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்,
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. 1

விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன் விரும்பி ஆட்பட்டேன்,
குற்றம் ஒன்றுஞ் செய்த தில்லை கொத்தை ஆக்கினீர்,
எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்,
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே. 2

ஆயம் பேடை அடையுஞ் சோலை ஆரூர் அகத்தீரே,
ஏயெம் பெருமான் இதுவே ஆமா றுமக்காட் பட்டோர்க்கு,
மாயங் காட்டிப் பிறவி காட்டி மறவா மனங்காட்டிக்,
காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால் வாழ்ந்து போதீரே. 7

பேயோ டேனும் பிரிவொன் றின்னா தென்பர் பிற ரெல்லாம்,
காய்தான் வேண்டிற் கனிதான் அன்றோ கருதிக் கொண்டக்கால்
நாய்தான் போல நடுவே திரிந்தும் உமக்காட் பட்டோர்க்கு,
வாய்தான் திறவீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. 9

காரூர் கண்டத் தெண்டோள் முக்கண் கலைகள் பல வாகி,
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே அடிப்பே ராரூரன்,
பாரூர் அறிய என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர்,
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே. 11

---

எட்டாம் திருமுறை

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்றரு ளாயே.

வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய்நீ,
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டி என்னைப்பணி
[கொண்டாய்,
வேண்டிநீயா தருள் செய்தாய் யானும் அதுவே வேண்டின்
[அல்லால்
வேண்டும் பரிசொன்றுண் டென்னில் அதுவும் உன்றன்
[விருப்பன்றே.

அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமுங்,
குன்றே அனையாய் என்னை ஆட் கொண்டபோதே கொண்டிலை
[யோ
இன்றோர் இடையூ றெனக்குண்டோ எண்தோள் முக்கண்
[எம்மானே,
நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே.

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

## திருக்கோவையார்

மூவர்நின் றேத்த முதலவன்
ஆடமுப் பத்துமும்மைத்
தேவர்சென் றேத்துஞ் சிவன்தில்லை
யம்பலஞ் சீர்வழுத்தாப்
பாவர்சென் றல்கும் நரக
மனைய புனையழற்கான்
போவர்நங் காதல ரென்நாம்
உரைப்பது பூங்கொடியே.

---

## ஒன்பதாம் திருமுறை

கோயில் பண் : சாளரபாணி

அல்லியம் பூம்பழனத் தாமூர் நா வுக்கரசைச்
செல்ல நெறிவகுத்த சேவகனே தென்தில்லைக்
கொல்லை விடையேறி கூத்தா டரங்காகச்
செல்வம் நிறைந்தசிற் றம்பலமே சேர்ந்தனையே.

எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டெமையாளும்
சம்பந்தன் காழியர்கோன் தன்னையும்ஆட் கொண்டருளி
அம்புந்து கண்ணாளுந் தானும் அணிதில்லைச்
செம்பொன்செய் அம்பலமே சேர்ந்திருக்கை ஆயிற்றே.

---

## திருப்பல்லாண்டு

மிண்டுமனத் தவர்போமின் கள்மெய்யடி
யார்கள்விரைந் துவம்மின்,
கொண்டுங்கொ டுத்துங்குடி குடியீசற்காட்
செய்மின் குழாம்புகுந்து,
அண்டங்கடந் தபொருளள வில்லதோரா
னந்தவெள் ளப்பொருள்,
பண்டுமின்று மென்றுமுள்ள பொருளென்றே
பல் லாண்டுகூ றுதுமே,

நிட்டையிலா வுடனீத்தென்னை யாண்ட
நிகரிலா வண்ணங்களும்,
சிட்டன்சிவ னடியாரைச் சீராட்டுந்
திறங்களுமே சிந்தித்(து),
அட்டமூர்த்திக் கென்னக நெகவூறு
மமிர்தினுக்(கு) காலநிழற்,
பட்டனுக்கென் னைத்தன்பாற் படுத்தா
னுக்கேபல் லாண்டுகூறுதுமே.

சீருந்திருவும் பொலியச்சிவ லோகநாயகன் சேவடிக்கீழ்
ஆரும்பெறாத வறிவுபெற் றேன்பெற்றதார் பெறுவாருலகில்
ஊருமுலகுங் கழறவுழறி யுமைமணவாள னுக்காட்
பாரும்விசும்பு மறியும்பரிசு நாம்பல் லாண்டுகூறுதுமே.

குழலொலியா ழொலிகூத் தொலியேத்
தொலியெங் குங்குழாம்பெருகி,
விழவொலிவிண் ணளவுஞ் சென்றுவிம்மி
மிகுதிருவா ரூரில்,
மழவிடையாற் குவழிவழி யாளாய்
மணஞ்செய் குடிப்பிறந்த,
பழவடியா ரொடுங்கூடி யெம்மா
னுக்கேபல் லாண்டுகூறுதுமே.

ஆரார்வந் தாரமரர் குழாத்தில ணியுடையா திரைநாள்
நாராயண னொடுநான் முகனங்கி இரவியு மிந்திரனும்
தேரார்வீ தியிற்றேவர் குழாங்கடி சையனைத்து நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் மாடியும்பல் லாண்டுகூறுதுமே.

திருச்சிற்றம்பலம்

---

உ

திருச்சிற்றம்பலம்

## பத்தாம் திருமுறை

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளுஞ்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.

சிவாய நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமையை தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே.

---

## பதினோராம் திருமுறை

### ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி

வாட்டுவர் தத்தந் துயரைவன் கேழலின் பின்புசென்ற
வேட்டுவர் கோலத்து வேதத் தலைவனை மெல்விரலார்
தோட்டியல் காதன் இவனென்று தாதைக்குச் சூழ்விசும்பிற்
காட்டிய கன்றின் கழற்றிற மானவை கற்றவரே,

பெறுவது நிச்சயம் அஞ்சல்நெஞ் சேபிர மாபுரத்து
மறுவறு பொற்கழல் ஞானசம் பந்தனை வாழ்த்துதலால்
வெறியுறு கொன்றை மறியுறு செங்கை விடைஎடுத்த
பொறியுறு பொற்கொடி எம்பெரு மானமர் பொன்னுலகே.

---

## பன்னிரண்டாம் திருமுறை — பெரிய புராணம்

செய்வினையுஞ் செய்வானு மதன்பயனுஞ் சேர்ப்பானு
மெய்வகையா னன்காகும் விதித்தபொரு ளெனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே யுணர்ந்தறிந்தார்

காணாத அருவினுக்கும் உருவினுக்குங் காரணமாய்
நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்
நாணாது நேடியமால் நான்முகனுங் காணநடுச்
சேணாருந் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய்.

---

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

குலத்தோடு தெய்வக் குழாம்பிழிந் தூற்றிக்
குடித்துச் சுவைத்துமிழ்ந்த
கோதென்று மழல்விடங் கொப்புளிக் கின்றவிரு
கோளினுச் சிட்டமென்றும்,

கலைத்தோடு மூடிக் களங்கம் பொதிந்திட்ட
கயரோகி யென்றுமொருநாள்
கண்கொண்டு பார்க்கவுங் கடவதன் றெனவும்
கடற்புவி யெடுத்திகழவிப்

புலத்தோடு முடுமீன் கணத்தோடு மோடுநின்
போல்வார்க்கு மாபாதகம்
போக்குமித் தலமலது புகலில்லை காண்மிசைப்
பொங்குபுனல் கற்பகக்கா

டலைத்தோடு வைகைத் துறைப்படி மடப்பிடியொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே.

திருச்சிற்றம்பலம்

---


LIBRARY, KOVILPATTI 19068



உ
திருச்சிற்றம்பலம்

திருப்புகழ்

பரவு நெடுங்கதி ருலகில் விரும்பிய
பவனி வரும்படி யதனாலே-
பகர வளங்களு நிகர விளங்கிய
இருளை விடிந்தது நிலவாலே ;
வரையினி லெங்கணு முலவி நிறைந்தது
வரிசை தரும்பத மதுபாடி-
வளமொடு செந்தமி ழுரைசெய அன்பரு
மகிழ வரங்களும் அருள்வாயே ;
அரஹர சுந்தர அறுமுக என்றுனி
அடியர் பணிந்திட மகிழ்வோனே-
அசலநெ டுங்கொடி அமையுமை தன்சுத
குறமக ளிங்கித மணவாளா ;
கருதரு திண்புய சரவண குங்கும
களபம ணிந்திடு மணிமார்பா-
கனக மிகும்பதி **மதுரை** வளம்பதி
யதனில் வளர்ந்தருள் பெருமாளே.

---

தேவார மகிமை

அருமறையைச் சிச்சிலிப்பண் டருந்தத்தேடும்
அதுபோலன் றிதுவென்று முளதாமுண்மைப்
பரபதமுந் தற்பரமும் பரனேயன்றிப்
பலரில்லை யென்றெழுதும் பனுவல்பாரில்
எரியினிடை வேவாதாற் றெதிரேயோடும்
என்புக்கு முயிர்கொடுக்கு மிடுநஞ்சாற்றும்
கரியைவளை விக்குங்கன் மிதக்கப்பண்ணும்
கராமதலை கரையிலுறக் காற்றுங்காணே.

திருச்சிற்றம்பலம்

---

ஆகப் பாடல்கள் :79

# பன்னிரு திருமுறைகளின் விளக்கம்.

| திருமுறை எண் | ஆசிரியர் | திருமுறையின் பெயர் | பாடல் தொகை |
|---|---|---|---|
| 1-3 | திருஞான சம்பந்த சுவாமிகள் | திருக்கடைக்காப்பு | 4158 |
| 4-6 | திருநாவுக்கரசு (அப்பர்) சுவாமிகள் | தேவாரம் | 3067 |
| 7 | சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்னும் ஆரூரர் | திருப்பாட்டு | 1026 |
| 8 | மாணிக்கவாசக சுவாமிகள் | திருவாசகம்<br>திருக்கோவையார் | 658<br>400 |
| 9 | திருமாளிகைத்தேவர் உள்ளிட்ட ஒன்பதின்மர் | திருவிசைப்பா | 288 |
| ,, | சேந்தனர் | திருப்பல்லாண்டு | 13 |
| 10 | திருமூலர் | திருமந்திரம் | 3047 |
| 11 | திருவாலவாயுடையார் (சோமசுந்தரர்) உள்ளிட்ட பன்னிருவர் | பதினோராந் திருமுறை | 1406 |
| 12 | சேக்கிழார் | பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர்புராணம் | 4286 |
| | மொத்தம் 27 | | 18349 |

திருச்சிற்றம்பலம்

# சைவ சித்தாந்த சாத்திர நூல்களின் விளக்கம்

| எண் | நூலின் பெயர் | ஆசிரியரின் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 1 | திருவுந்தியார் | உய்யவந்த தேவநாயனார் | — |
| 2 | திருக்களிற்றுப்படியார் | திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் | — |
| 3 | சிவஞான போதம் (வார்த்திகப் பொழிப்புரையுடன்) | மெய்கண்ட தேவநாயனார் | சந்தான குரவரில் முதல்வர் |
| 4 | சிவஞான சித்தியார் | அருணந்தி சிவாச்சாரியார் | மேற்கண்டவரின் சீடர். சந்தான குரவரில் இரண்டாமவர் |
| 5 | இருபா இருபஃது | ஷை | |
| 6 | உண்மை விளக்கம் | திருவதிகை மனவாசகங்கடந்தார் | — |
| 7 | சிவப்பிரகாசம் | உமாபதி சிவாச்சாரியார் | சந்தான குரவரில் நான்காமவர் |
| 8 | திருவருட்பயன் | உமாபதி சிவாச்சாரியார் | |
| 9 | வினாவெண்பா | உமாபதி சிவாச்சாரியார் | |
| 10 | போற்றிப்பஃறொடை | உமாபதி சிவாச்சாரியார் | |
| 11 | கொடிக்கவி | உமாபதி சிவாச்சாரியார் | |
| 12 | நெஞ்சுவிடுதூது | உமாபதி சிவாச்சாரியார் | |
| 13 | உண்மைநெறி விளக்கம் | உமாபதி சிவாச்சாரியார் | |
| 14 | சங்கற்பநிராகரணம் | உமாபதி சிவாச்சாரியார் | |

## சமயக் குரவர்கள் நால்வரைப் பற்றிய குறிப்புகள்

| எண் | குறிப்புகளின் வகை | திருஞானசம்பந்த சுவாமிகள் | திருநாவுக்கரசு சுவாமிகள் | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | மாணிக்கவாசக சுவாமிகள் |
|---|---|---|---|---|---|
| 1 | அவதரித்த நாடு | சோழ நாடு (தஞ்சை மாவட்டம்) | நடு (கடலூர் | நாடு மாவட்டம்) | பாண்டி நாடு (மதுரை மாவட்டம்) |
| 2 | அவதரித்த தலம் | சீர்காழி | திருவாமூர் | திருநாவலூர் | திருவாதவூர் |
| 3 | அவதரித்த குலம் | வைதீக அந்தணர் | வேளாளர் | ஆதிசைவர் | அமாத்திய அந்தணர் |
| 4 | வாழ்ந்த வயது | 16 | 81 | 18 | 32 |
| 5 | வாழ்ந்த காலம் | ஏழாம் | நூற்றாண்டு | ஒன்பதாம் நூற்றாண்டு, | நான்காம் நூற்றாண்டு |
| 6 | அருளிய திருமுறைகள் | திருக்கடைக் காப்பு 1, 2-3. | தேவாரம் 4, 5-6 | திருப்பாட்டு 7 | திருவாசகம் திருக்கோவையார் 8 |
| 7 | விளக்க வந்த வழிபாட்டு முறை | கிரியை | சரியை | யோகம் | ஞானம் |
| 8 | சிவமான நாள் | வைகாசி மூலம். | சித்திரைச் சதயம் | ஆடிச் சுவாதி | ஆனி மகம் |

## சந்தான குரவர்கள்

(i) அகச்சந்தானம் :- நால்வர் : சரித்திர காலத்திற்கு முற்பட்டவர்

1. திருநந்திதேவர் 2. சனற்குமார முனிவர் 3. சத்தியஞான தரிசினிகள் 4. பரஞ்சோதிமுனிவர்

(ii) புறச்சந்தானம் : நால்வர் : பதிமூன்றும் நூற்றுண்டு

| பெயர் | அவதரித்த நாடு | அவதரித்த தலம் | அவதரித்த குலம் | அருளிய சாத்திர நூல்கள் | சிவமான நாள் |
|---|---|---|---|---|---|
| 1. மெய்கண்டதேவர் | நடுநாடு (கடலூர் மாவட்டம்) | பெண்ணை கடம் | சைவ வேளாளர் | சிவஞானபோதம் (வார்த்திகப் பொழிப்புரையுடன்) | ஐப்பசி சுவாதி |
| 2. அருணந்தி சிவாச்சாரியார் | ஷை | திருத் துறையூர் | ஆதிசைவர் | 1. சிவஞானசித்தியார் 2. இருபா இருபஃது | புரட்டாசி பூரம் |
| 3. மறைஞான சம்பந்தர் | சோழநாடு (தஞ்சை மாவட்டம்) | மருதூர் | ஷை | | ஆவணி உத்திரம் |
| 4. உமாபதி சிவாச்சாரியார் | சோழநாடு (கடலூர் மாவட்டம்) | திருத்தில்லை | தில்லைவாழ் அந்தணர் | 1. சாத்திர நூல்கள் 8 (நூல் விபரப் பட்டியலைப் பார்க்க) 2. பிற நூல்கள் ☼ 6 | சித்திரை அஸ்தம் |

☼ 1. திருமுறை கண்ட புராணம் 2. திருத்தொண்டர் புராண சாரம் 3. திருப்பதிகக் கோவை 4. திருப்பதிக் கோவை 5. சேக்கிழார் புராணம் 6. சிவக்ஷேத்திர சிவநாமக் கலிவெண்பா

உ

திருச்சிற்றம்பலம்

## திருத்தொண்டத் தொகையடியார்கள் 72

1. காலம்

(அ) தனி அடியார் : 63

| | |
|---|---|
| 1. கி. பி. 600 (சம்பந்தர், அப்பர் இவர்களுக்கு முற்பட்டவர்) | 17 |
| 2. 601 — 680 (சம்பந்தர், அப்பர் இருவரின் காலத்தவர்) | 11 |
| 3. 681—840 (இருவர் காலத்திற்கும் ஆரூரர் காலத்திற்கும்) இடைப்பட்டவர் | 22 |
| 4. 840 க்குப்பின் (ஆரூரர் காலத்தவர்) | 13 |
| | 63 |

(ஆ) தொகையடியார் : முக்காலத்தவர் 9

| 2. வழிபாட்டு முறை | தனி அடியார் | தொகை அடியார் | மொத்தப் |
|---|---|---|---|
| 1, சிவலிங்க பக்தி | 36 | 8 | 44 |
| 2. சங்கம பக்தி | 19 | — | 19 |
| 3. குருபக்தி | 8 | — | 8 |
| 4· முற்பிறவியின் பயன் | — | 1 | 1 |
| | 63 | 9 | 72 |

3. மரபு (அ) தனி அடியார்

| | | |
|---|---|---|
| 1. | வேளாளர் | 13 |
| 2. | மாமறையோர் (அந்தணர்) | 12 |
| 3. | சிவமறையோர் (ஆதிசைவர்) | 4 |
| 4. | முடி மன்னர் | 6 |
| 5. | குறுநில மன்னர் | 5 |
| 6. | வணிகர் | 5 |
| 7. | ஆயர் | 2 |
| 8. | மருத்துவர் (மாமாத்திரர்) | 1 |
| 9. | வேட்கோவர் (குயவர்) | 1 |
| 10. | சான்றார் | 1 |
| 11. | செக்கார் | 1 |
| 12. | சாலியர் | 1 |
| 13. | பாணர் | 1 |
| 14. | ஏகாலியர் | 1 |
| 15. | வேடர் | 1 |
| 16. | பரவர் | 1 |
| 17. | புலையர் | 1 |
| 18. | மரபு தெரியவராதவர் | 6 |
| | | 63 |

(ஆ) தொகையடியார்

| | | |
|---|---|---|
| 1. | தில்லைவாழ் அந்தணர் | 1 |
| 2. | சிவமறையோர் | 1 |
| 3. | பலவகை மரபினர் | 7 |
| | | 9 |

திருச்சிற்றம்பலம்

## பாடல் முதற்குறிப்பகராதி

மேவிசு அச்சகம், 7, பவர்ஹவுஸ் ரோடு, மதுரை-1.

# திருத்தொண்டத் தொகையடியார்
## திருநக்ஷத்திரங்கள்

| மாதம் | நாயனர் | நக்ஷத்திரம் |
| --- | --- | --- |
| சித்திரை | தில்லைவாழந்தணர் | ஆண்டு முதல் நாள் |
| | மங்கையர்க்கரசியார் | ரோகணி |
| | விறன்மிண்டர் | திருவாதிரை |
| | இசைஞானியார் | சித்திரை |
| | திருக்குறிப்புத்தொண்டர் | சுவாதி |
| | திருநாவுக்கரசர் | சதயம் |
| | சிறுத்தொண்டர் | பரணி |
| வைகாசி | சோமாசிமாறர் | ஆயில்யம் |
| | நமிநந்தி அடிகள் | பூசம் |
| | திருஞானசம்பந்தர் | மூலம் |
| | முருகநாயனர் | ,, |
| | திருநீலநக்க நாயனர் | ,, |
| | திருநீலகண்டயாழ்ப்பாணர் | ,, |
| | கழற்சிங்கர் | பரணி |
| ஆனி | ஏயர்கோன்கலிக்காமர் | ரேவதி |
| | மாணிக்கவாசகர் | மகம் |
| | அமர்நீதி நாயனர் | பூரம் |
| ஆடி | கலிய நாயனர் | கேட்டை |
| | கோட்புலியார் | ,, |
| | மூர்த்தி நாயனர் | கார்த்திகை |
| | புகழ்ச்சோழர் | ,, |
| | கூற்றுவர் | திருவாதிரை |
| | பெருமிழலைக்குறும்பர் | சித்திரை |
| | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | சுவாதி |
| | கழறிற்றறிவார் | ,, |
| ஆவணி | செருத்துணை நாயனர் | பூசம் |
| | அதிபத்த நாயனர் | ஆயில்யம் |
| | புகழ்த்துணையார் | ,, |
| | இளையான்குடிமாறர் | மகம் |
| | குலச்சிறையார் | அனுஷம் |
| | குங்கிலியக்கலயர் | மூலம் |
| புரட்டாசி | நரசிங்கமுனையரையர் | சதயம் |
| | உருத்திரபசுபதியார் | அசுவதி |
| | திருநாளைப்போவார் | ரோகணி |
| | ஏனதிநாதநாயனர் | உத்திராடம் |

| | | |
|---|---|---|
| ஐப்பசி | திருமூல நாயனார் | அசுவதி |
| | நெடுமாறர் | பரணி |
| | இடங்கழி நாயனார் | கார்த்திகை |
| | சக்தி நாயனார் | பூசம் |
| | பூசலார் நாயனார் | அனுஷம் |
| | ஐயடிகள்காடவர்கோன் | மூலம் |
| கார்த்திகை | கணம்புல்லர் | கார்த்திகை |
| | மெய்ப்பொருள் | உத்திரம் |
| | ஆனாயர் | அஸ்தம் |
| | மூர்க்க நாயனார் | மூலம் |
| | சிறப்புலி நாயனார் | பூராடம் |
| மார்கழி | சடைய நாயனார் | திருவாதிரை |
| | இயற்பகை நாயனார் | உத்திரம் |
| | மானக்கஞ்சாறர் | சுவாதி |
| | சாக்கிய நாயனார் | பூராடம் |
| | வாயிலார் நாயனார் | ரேவதி |
| தை | கண்ணப்பர் | மிருகசீரிடம் |
| | அரிவாட்டாயர் | திருவாதிரை |
| | சண்டேசுரர் | உத்திரம் |
| | திருநீலகண்டர் | விசாகம் |
| | அப்பூதியடிகள் | சதயம் |
| | கலிக்கம்ப நாயனார் | ரேவதி |
| மாசி | எறிபத்த நாயனார் | அஸ்தம் |
| | காரிநாயனார் | பூராடம் |
| | கோட்செங்கட்சோழர் | சதயம் |
| பங்குனி | காரைக்காலம்மையார் | சுவாதி |
| | தண்டியடிகள் | சதயம் |
| | நேசநாயனார் | ரோகிணி |
| | கணநாதர் | திருவாதிரை |
| | முனையடுவார் | பூரம் |
| | தொகையடியார் - எண்மர் - | ஆண்டு நிறைவு நாள் |

